**பிரகாசமாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன...

**வெண்மையாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன...

# ஸன்லைட் சோப்பினால் தான்




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 150-50 TM

# இளமை விருந்து !
# இலட்சியக் குரல் !

பாரகன்

மகாராணி

லக்ஷ்மி

பிரகாஷ் புரொடக்ஷன்ஸ்

# அண்ணி

## தமிழ்

ஜி. வரலக்ஷ்மி
சேது நடித்தது

டைரக்ஷன்: பிரகாஷ் ராவ்

நேஷனல் பிக்சர்ஸ்... சென்னை.

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளு ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்கமுடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளு ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கிவிடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சகாயமாயிருக்கிறது. ஆதலால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப் போலவே க்ஷவரம்செய்துகொள்ளலாம்.



# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

6 பிளேடுகளுக்கு 14 அணா

# சர்வாதிகாரி

மாடர்ன் ✦ தியேட்டர்ஸ்

தயாரிப்பு....



விழிக்கு விழி பரபரப்பைத்
தோற்றுவிக்கும் எண்ணற்ற
தீரச்செயல்கள் நிறைந்த
மகோன்னதத் திரைச்சித்திரம்

விரைவில் வருகிறது......

டைரக்ஷன்·T.R.சுந்தரம் • வசனம்·ஆசைத்தம்பி

பிரபல நாவலாசிரியரும், தங்க மெடல்கள் பரிசு பெற்றவருமான

# வடுவூர் K. துரைசாமி அய்யங்கார், B.A.

அவர்களால் இயற்றிய **தேனினும் இனிய தமிழ் நாவல்கள்**

| | | | |
|---|---|---|---|
| திகம்பர சாமியார் அல்லது கும்பகோணம் வக்கீல் | 2 பாகங்கள் | விலை ரூ. | 4-8-0 |
| மேனகா | 2 பாகங்கள் | ,, | 4-8-0 |
| மதன கல்யாணி | 3 பாகங்கள் | ,, | 7-0-0 |
| சௌந்தர கோகிலம் | 3 பாகங்கள் | ,, | 8-0-0 |
| மாயாவிநோத பரதேசி | 2 பாகங்கள் | ,, | 7-0-0 |
| பூர்ண சந்திரோதயம் | 4 பாகங்கள் | ,, | 10-0-0 |
| பாலாமணி அல்லது பக்காத் திருடன் | | ,, | 3-8 0 |
| வசந்த மல்லிகா | ... | ,, | 2-8-0 |
| வித்தியா சாகரம் | ... | ,, | 2-4-0 |

(தபாற் செலவு பிரத்தியேகம்)

கிடைக்குமிடம்: **பாலாஜீ அண்டு கம்பெனி**

8, ராஜரத்தினம் தெரு, கீழ்ப்பாக்கம், சென்னை-10

---

## பாக்கெட் ரப்பர் பிரஸ்



எல்லா ஆங்கில எழுத்துக்களும் கொண்ட சிறிய அச்சடிக்கும் இயந்திரம் இது. ஒன்றை வாங்கி இந்தே நிமிஷங்களில் உங்களது லெட்டர் பாடுகள், பில்கள், பெயர்கள் இவைகளை அச்சடித்துக்கொள்ளுங்கள். மிகவும் ஆச்சரியகரமான நவீனம். அச்சடிக்கும் பாடு, இங்க், விவரங்களடங்கிய குறிப்புகள் சகலமும் உள்பட ஒன்றின் விலை ரூ. 6/- வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-4 தனி.

### "பாஷைகளின் ஆசான்"

### 48 மணி நேரத்தில் 14 பாஷைகள்

14 பாஷைகளின் ஆசான் என்னும் எங்கள் புத்தகம் ஒன்றின் உதவியால் ஹிந்தி, ஆங்கிலம் குஜராத்தி, பர்மீய பாஷை, சீன பாஷை, தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் எழுதவும், படிக்கவும், பேசவும் கற்றுக் கொள்ளுங்கள். வி. பி. பி. யில் அனுப்ப இன்றே எழுதுங்கள். ஒன்றின் விலை: ரூ. 5. தபால் செலவு அணா 12 தனி.



தற்போது கிடைக்கிறது

அமெரிக்கன் மாடல்

ரோல் பிலிம்

பாக்ஸ்

## காமிரா

திருஷ்டி உபகரணத்துடன் உயர்ந்த லென்ஸுகள் பொருத்தப்பட்ட, விலையில் மலிவான மேன்மையான காமிரா, புதிதாகக் கற்றுக் கொள்பவர்களும் எளிதாக உபயோகிக்கலாம். பிலிம் நெ. 120-ல் நீண்ட காலம் திருப்தி அளிக்கும். 2¼" × 3¼" சைஸ் போட்டோக்கள் எடுக்கலாம். திருப்திக்கு உத்திரவாதம். முழு விவரங்களடங்கிய குறிப்புகளுடன் விலை ரூ 11-8-0 பாக்கிங் தபால் செலவு ரூ. 1-8-0 தனி. தோல் கேஸ் ரூ. 3/- சரக்குகள் சொல்பமே உள்ளதால் உடனேயே தேவைக்கு எழுதவும்.

கடிதங்கள் ஆங்கிலத்திலேயே எழுதப்படல் வேண்டும்

**BENGAL TRADERS, (118K) KANWARIGANJ, ALIGARH. U.P.(INDIA)**

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன்

## செய்தீர்களா?

உங்கள் பற்களையும், ஈறுகளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக் கொண்டு காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதில் சொரசொரப்பான பொருள் ஏதுமில்லை. மிருதுவாகவே உங்கள் பற்களை பளபளப்பான வெண்ணிறம் உண்டாகும்படி சுத்தம் செய்யும். வாயில் வரும் அபாயகரமான புளிப்பு நீங்கிக் கரைந்து பல்சொத்தை பிடிப்பதைத் தடுக்கும்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மிகச் சுத்தமானது. உபயோகிப்பதற்கு ஆனந்தமாயிருக்கும். அதனுல் தான் உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான மக்கள் தினமும் இருதடவை தங்கள் பற்களை மக்ளீன்னினுல் துலக்குகிருர்கள்.

"...நான் எந்தப் பற்பசையை உபயோகிக்கிறேன் என்று இந்த வாரத்தில் எனக்குத் தெரிந்தவரெல்லாருமே கேட்டார்கள். ஏனெனில் என் பற்கள் அத்தனை வெண்மையாயிருக்கின்றன..."

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்**

MACLEANS
PEROXIDE TOOTH PASTE

MTY-5 TAM

வியாபார விபரங்களுக்கு: ஜே.எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11
இதழ் 5

1951 செப்டம்பர் 2

கர ௵
ஆவணி 17உ



கல்கி

மலர் 11 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 5

# மீண்டும் அவர் வருவாரோ?

தமிழ் நாட்டின் முதல் எழுத்தாளர் போய் விட்டார்; தமிழ் எழுத்தாளரின் மூத்த சகோதரர் போய் விட்டார்; நூற்றுக் கணக்கான இளம் எழுத்தாளரின் தாயும் தந்தையுமாய் விளங்கியவர் போய் விட்டார்.

அநீதியையும் அக்கிரமத்தையும் கண்டு எரிமலை போலக் கொதித்துக் கொண்டிருந்த இதயம் ஒடுங்கி விட்டது; அருகில் வந்ததை யெல்லாம் ஒளிமயமாக்கிய அறிவுச் சுடர் அணைந்து விட்டது; அர்த்தமற்ற கட்டுப்பாடுகளை எதிர்த்து இடைவிடாது போராடிய சுதந்திர ஆவேசப் புயல் அடங்கி விட்டது.

சூரிய வாளைப் போல் மின்னிக் குருட்டு நம்பிக்கைத் தளைகளைத் தகர்த்தெறிந்த பேச்சுத் திறன் மங்கி மறைந்து விட்டது; எட்டுத் திசையும் எதிரொலி செய்யும்படி முழங்கிய கலகல வென்னும் சிரிப்பு நின்று விட்டது; பேதமையையும் கோழைத்தனத்தையும் எதிர்த்துப் போர் முரசு போல முழங்கிய இடி முழக்கக் குரல் ஓய்ந்து விட்டது.

எங்கள் வ. ரா. போய் விட்டார்! மீண்டும் அவர் வருவாரா? அத்தகைய புண்ணியத்தை இத் தமிழ்நாடு செய்திருக்கிறதா?

பத்து நாளைக்கு முன்னர் உயிருடன் உலாவிய பேராசிரியர் வ. ரா. வின் பூத உடல் சிதையில் எரிந்து சாம்பராகி மண்ணோடு மண்ணாயும் நீரோடு நீராயும் காற்றோடு காற்றாயும் கலந்து விட்டது.

ஆனால் அவர் எங்கே சென்றிருக்கிறார்? அவருடைய ஆன்மா எத்திசை நோக்கி எத்தகைய பிரயாணத்தைத் தொடங்கி யிருக்கிறது?

''புனரபி ஜனனம் புனரபி மரணம்'' என்று ஆன்றோர் கூறியுள்ள வண்ணம் அவர் மீண்டும் இந்தப் பூமியில் வந்து பிறப்பாரோ? அப்படியானால் தமிழ் வெறி கொண்ட அப்பெரியார் இத் தமிழ்நாட்டிலேதான் வந்து பிறப்பார் என்பது உறுதி. தமிழ் நாட்டில் நமக்கு அடுத்த தலைமுறையில் ஒரு தலைசிறந்த எழுத்தாளர் தோன்றுவார் என்பதும் நிச்சயம். நம்முடைய சந்ததிகள் பாக்கியசாலிகளா யிருப்பார்கள்.

ஆனால் பூத உடலை நீத்தவர்களின் ஆன்மா வானுலகம் செல்கிறது என்பதாகவும் ஒரு கொள்கை இருக்கிறது. இது உண்மையாயின், பேராசிரியர் வ. ரா. இன்று வீர சொர்க்கங்களிலே மேலான வீர சொர்க்கத்துக்குப் போயிருப்பார் என்பது நிச்சயம். ஏனெனில் வ. ரா. தமது வாழ்நாளை யெல்லாம் வீரப் போராட்டத்திலேயே கழித்தார். தாய் நாட்டை அடிமைப் படுத்தி யிருந்த அன்னிய அரசாங்கத்தை எதிர்த்துப் போராடினார். சமூகத்தை அடிமைப்படுத்தியிருந்த சாதி வேற்றுமை முதலிய தீமைகளையும் மற்றும் சகுனம் ஜோதிடம் முதலிய மூடப் பழக்க வழக்கங்களையும் எதிர்த்துப் போராடினார். விதியின் பேரில் பாரத்தைப் போட்டுச் செயலிழந்து நிற்கும் கபோதித்தனத்தை எதிர்த்துப் போராடினார். அன்னிய பாஷை மோகத்தை எதிர்த்துப் போராடினார்; தனித் தமிழ் இயக்கம் என்னும் பொய் மாயையை எதிர்த்துப் போராடினார். வறுமைக் கொடுமையை எதிர்த்துப் போராடினார்; பணக்காரத் திமிர்வாதத்தை எதிர்த்துப் போராடினார். இப்படி வாழ்நாளெல்லாம் வீரப்போர் நடத்தி வீர மரணத்தை எய்தியவர் வீர சொர்க்கம் போகாவிட்டால் அந்த வீர சொர்க்கத்தின் உபயோகந்தான் என்ன? அது எதற்காக இருக்கிறது?

ஆனால் வ. ரா. வீர சொர்க்கத்துக்குப் போயிருந்த போதிலும் அங்கு அவர் நிலைத்திருப்பாரா என்பது கேள்வி. அவருடைய ஆன்மா அங்கே சாந்தி

அடைந்திருக்குமா! தமிழ் நாட்டுக்கு மீண்டும் திரும்பிப் போய் இங்கு இன்னும் மிகுந்துள்ள மூடப் பழக்க வழக்கங்களையும் குருட்டு நம்பிக்கைகளையும் எதிர்த்து ஒழிக்க அவருடைய ஆன்மா துடி துடிக்காமல் இருக்குமா! அவரை மீண்டும் இங்கு வராமல் தடுக்கும் சக்தி வானுலகத்திலேதான் யாருக்காவது இருக்க முடியுமா!

• • •

பேராசிரியர் வ. ரா. தமிழ் நாட்டுக்குச் செய்திருக்கும் தொண்டுகள் அனந்தம். அவர் எழுதிய நூல்களையும் பத்திரிகைக் கட்டுரைகளையும் படித்துப் பயனடைந்தவர்கள் எத்தனையோ பேர். அவருடைய பொறி பறக்கும் சம்பாஷணையினால் பயனடைந்தவர்கள் இன்னும் எத்தனையோ பேர். அவருடன் பேசிப் பழகியவர்களுடன் பேசிப் பழகிப் பயன் அடைந்தவர்கள் மற்றும் எவ்வளவோ பேர். அவர் ஊக்கி வளர்த்த எழுத்தாளர்களின் எழுத்தைப் படித்துப் பயனடைந்தவர்கள் பல்லாயிரக் கணக்கானவர்கள். அவரால் உற்சாகமடைந்த கலைவாணர்களின் கலைத்திறனால் பயன் பெற்றவர்கள் எண்ணத் தொலையாதவர்கள்.

தமிழ் நாட்டுக்குப் பேராசிரியர் செய்த தொண்டுகளிலெல்லாம் மகத்தான தொண்டு பாரதியாரின் பெருமையைத் தமிழ் மக்கள் நன்கு அறியும்படி செய்ததேயாகும். தெய்வத் தமிழ் உள்ளவரையில் பாரதியாரின் பெருமை இனி மறையாது. பாரதியார் பெயர் உள்ள வரையில் வ. ரா. வின் நினைவும் தமிழ் மக்களின் உள்ளத்தை விட்டு அகலாது.

வ. ரா. குடும்பம் மிகப் பெரிது. அவரைக் காதலித்து மணந்து தமிழ் நாட்டின் மரபுக்குகந்த வாழ்க்கைத் துணைவியாக விளங்கிய ஸ்ரீமதி புவனேசுவரி அம்மைக்கு நாம் எவ்வித ஆறுதலும் கூறுவது இயலாத காரியம். அவருடைய அருமைச் சகோதரர்களுக்கு எமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவரைத் தங்கள் மூத்த சகோதரராகக் கருதிப் போற்றி வந்த இளம் எழுத்தாளர் சமூகத்தின் துயரத்தை நாமும் பகிர்ந்து கொண்டு அநுபவிக்கிறோம்.

# நேருஜிதான் வேண்டும்! வேறுஜி வேண்டாம்!

பண்டித ஜவாஹர்லாலின் ராஜிநாமாவைப் பற்றிய செய்தி வந்ததிலிருந்து பாரத நாட்டு மக்கள் தங்கள் தெளிவான அபிப்பிராயத்தைப் புலப்படுத்தி வருகிறார்கள். "நேருஜிதான் எங்களுக்கு வேண்டும்! வேறுஜி யாரும் வேண்டாம்! கனாஜி, கோதம்ஜி முதலியவர்கள் வேண்டவே வேண்டாம்!" என்பதுதான் இந்தியப் பொது மக்களின் ஏகோபித்த அபிப்பிராயம் என்று தெரிய வந்திருக்கிறது.

நேருஜி இந்திய பார்லிமெண்ட் அங்கத்தினர் கூட்டத்தில் பேசும்போது தமது நிலைமை இன்னதென்பதைத் தெளிவு படுத்தினார். "காங்கிரஸ் மகாசபை பொதுமக்கள் தொடர்பிலிருந்து நழுவித் தூர தூரப் போய்க் கொண்டிருக்கிறது. காங்கிரஸ் நிர்வாகிகள் பொது மக்களுக்குத் தொண்டு செய்வதை மறந்து ஸ்தானப் போராட்டச் சூழ்ச்சிகளில் கவனம் செலுத்தி வருகிறார்கள். அவர்களுடைய காரியங்களுக்கெல்லாம் நான் பொறுப்பு வகிக்க விரும்பவில்லை. ஆகையினாலேயே காரியக் கமிட்டியிலிருந்து விலகிக் கொண்டேன்" என்றார்.

இன்னும் ஒரு மிக முக்கியமான விஷயத்தையும் நேருஜி எடுத்து விளக்கினார். "காங்கிரஸ் மகா சபையிலும் அ. இ. கா. கமிட்டியிலும் நான் கொண்டு வரும் நல்ல தீர்மானங்களையெல்லாம் நிறைவேற்றி விடுகிறார்கள். ஆனால் அத்தீர்மானங்களுக்கு மாறாகவே காரியங்கள் நடந்துகொண்டு போகின்றன! 'இந்த நேரு பைத்தியத்தைக் குஷிப்படுத்தி வைப்போம். பிறகு நம் இஷ்டம்போல் காரியம் செய்வோம்' என்ற எண்ணத்துடனேயே தீர்மானங்களை நிறைவேற்றுகிறார்கள் போலிருக்கிறது!" என்று ஜவாஹர்லால்ஜி கூறினார்.

இந்த அபூர்வமான சூழ்ச்சியைப் பற்றிச் சென்ற பிப்ரவரி பதினோராந் தேதி "கல்கி" இதழில் நாம் எழுதியதை நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம்:—

"கொரியா தீர்மானமா!

ஜவாஹர்லால் கூறுகிறதே சரி!

கம்யூனிஸ்ட் சைனாவை அங்கீகரிப்பதா!

ஜவாஹர்லாலைப் பார்த்துக் கையைத் தூக்கு!

காஷ்மீரா! நேபாளமா! திபேத்தா!

மேற்படி! மேற்படி! மேற்படி!

அகில இந்திய உணவுப் பிரச்னையா!

ஜவாஹர்லால் சொன்னபடி ததாஸ்து!

காங்கிரஸ் புனரமைப்பா!

சரி! சரி! இதோ கையைத் தூக்கியாயிற்று!

இப்படியாக, பெரும்பாலான காரியங்களில் தீர்மானம் என்ன சொல்கிறது என்பதைக் கூடக் கவனியாமலும் கவனித்துப் புரிந்து கொள்ளாமலும் கையைத் தூக்கத் தயாராயிருக்கிறார்கள்!

ஆனால் மாகாணங்களில் தங்களுடைய கோஷ்டி பலத்தைப் பாதிக்கும்படியான ஏதேனும் ஒரு யோசனை வந்தால், அதை நாஸுக்காகத் தள்ளி விடுகிறார்கள்!........"

காங்கிரஸ் அதிகார வர்க்கக் கும்பலின் இந்த அபூர்வமான சூழ்ச்சியைப்பற்றி நேருஜி இப்போதாவது அறிந்து கொண்டது பற்றி ஒருவாறு மகிழ்ச்சி அடைகிறோம்.

எனினும் இப்போதுகூட என்ன நடக்கும் என்று நமக்குத் தோன்றுகிறது தெரியுமா!

பொது மக்களின் நோக்கம் இன்னதென்பது காங்கிரஸ் அதிகார கோஷ்டிகளுக்குத் தெரிந்து போய் விட்டபடியால், டில்லியில் கூடப் போகும் அ. இ. கா. கமிட்டியில் "எங்க

## "நானும் வருகிறேன்!"




ளுக்கும் நேருஜிதான் வேண்டும்" என்று மாகாண காங்கிரஸ் ஹிட்லர்களும் கூடச் சேர்ந்து கோஷித்து விடுவார்கள்.

"நேருஜி சொல்கிறபடி காரியக் கமிட்டியை மாற்றி அமையுங்கள்; இல்லாவிட்டால் வெளியே நடங்கள்" என்று டாண்டன்ஜிக்கும் அவர்கள் சொல்லி விடுவார்கள். தேர்தல் முடியும் வரையில் இந்தக் கபட நாடகம் நடக்கும். தேர்தலில் தங்கள் ஆட்களையே போட்டுக் கொண்டுவரப் பார்ப்பார்கள். தேர்தல் முடிந்த பிறகு நேருஜியைப் பார்த்துப் பழைய படி "உமக்கும் பேப்பே! உம் அப்பனுக்கும் பேப்பே!" என்று சொல்லி விடுவார்கள்.

இப்படிக் காங்கிரஸ் அதிகார வர்க்கத்தினர் செய்யக் கூடியவர்கள்தான். ஆனால் இந்தச் சூழ்ச்சிக்கு நேருஜி இனியும் இடம் கொடுப்பாரா! மறுபடியும் வெறும் பசப்பு வார்த்தைகளைக் கேட்டு ஏமாந்து போவாரா!

நேருஜி மீண்டும் ஏமாறக் கூடாது. உறுதியாக நிற்கவேண்டும் என்பது நமது விருப்பம்; பொது மக்களின் பிரார்த்தனை.

காங்கிரஸ் நிர்வாகத்தை இச்சமயம் நேருஜி அடியோடு தூய்மைப்படுத்த வேண்டும். பொதுத் தேர்தலுக்கு நேர்மையும் திறமையும் தேச பக்தியும் உள்ள அபேட்சகர்களையே நிறுத்த வேண்டும். அப்போதுதான் அவர் இப்போது கைக்கொண்டிருக்கும் அதிர்ச்சி வைத்தியம் பயன் பட்டதாகும்.

சரியான சமயத்தில் சரியான நடவடிக்கையை மேற்கொண்ட தலைவர் நேருவின் படத்தை மீண்டும் நமது அட்டையில் பிரசுரித்து நமது வணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறோம்.

## இதோ ஒரு மாகாண ஹிட்லர்!

**கா**ங்கிரஸ் ஸ்தாபனத்திலேயுள்ள மாகாண ஹிட்லர்களைப் பற்றி நாம் குறிப்பிட்ட போது, யாரைப் பற்றிச் சொல்கிறோம் என்று சில நேயர்கள் வியப்படைந்திருக்கலாம். உதாரணத்துக்கு இதோ ஒரு மாகாண ஹிட்லரைப் பார்த்துக் கொள்ளுங்கள். மத்திய மாகாணத்தில் பண்டித டி. பி. மிஸ்ரா என்றால், அழுத பிள்ளை வாயை மூடுமா! மூடவே மூடாது! இன்னும் வாயை அகலமாகத் திறந்து அமோகமாக அழத் தொடங்கும்! நல்லவர்கள் அவர் பெயரைக் கேட்டால் கதி கலங்குவார்கள்; பெண்மணிகள் மூர்ச்சை போட்டு விழுவார்கள். மாகாண முதன் மந்திரி முதல் கிராமத் தலையாரி வரையில் டி. பி. மிஸ்ரா என்றால் கையைக் கட்டிக் கொண்டு ஸலாம் போடுவார்கள். உத்தியோக வர்க்கத்தினரோ மூச்சைப் பிடித்துக் கொண்டு, "எஜமான்! ஆக்ஞை என்ன!" என்பார்கள்.

அப்பேர்ப்பட்ட டி. பி. மிஸ்ரா தமது உள்நாட்டு மந்திரி வேலையை உதறித் தள்ளிவிட்டுப்

போர்க்கோலம் பூண்டு புறப்பட்டு விட்டார். யாரோடு போர் புரிவதற்கு! அந்தப் பொல்லாத சர்வாதிகார வெறி கொண்ட பண்டித ஜவாஹர்லால் நேருவுடன் போராடுவதற்குத்தான்.




மத்திய மாகாண ஹிட்லர் மிஸ்ரா தம் பூர்வாங்க அறைகூவலை வெளி யிட்டிருக்கிறார். அதில் என்ன சொல்லி யிருக்கிறார் தெரியுமா! "கிடந்தால் கிடக்கிறது, போனால் போகிறது என்று பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த நேருவின் அக்கிரமம் தாங்க முடியவில்லை" என்று கூறிவிட்டு, அந்த அக்கிரமத்துக்கு ஒரு உதாரணமும் சொல்லி யிருக்கிறார். "சர்தார் வல்லபாய் படேலின் பெயரை இழுப்பதற்கு இந்த நேரு யார்!" என்று கேட்டிருக்கிறார்.

சர்தாரைப் பற்றி நேரு என்ன சொன்னார் தெரியுமா! "சர்தார் படேல் ஜீவித்திருந்த காலம் வரையில் காங்கிரஸ் ஸ்தாபன விவகாரங்களை அவரே கவனித்துக் கொண்டிருந்தார். நான் அதிகமாகக் கவனிக்க வில்லை. அவர் காலமான பிறகு கவனிக்க வேண்டியதாயிற்று" என்றுதான் சொன்னார்.




இதில் என்ன தவறு! படேலுக்குப் பிறகு காங்கிரஸ் நிர்வாகத்தை நேரு கவனிக்காவிட்டால் வேறு யார் கவனிப்பது! இந்த டி. பி. மிஸ்ராவுக்கும் அவருடைய கூட்டாளிகளுக்கும் தான் சர்தார் படேல் பட்டம் கட்டி விட்டுப் போனாரா!

நேருஜி படேல் பெயரைச் சொல்லக் கூடாது என்று கூறும் அதிகப் பிரசங்கி மேலும் என்ன சொல்லி யிருக்கிறார் என்பதைக் கேளுங்கள் :—

"சர்தார் படேல் உயிரோடிருந்த போது ஜவாஹர்லால் நேரு இல்லாமலே காங்கிரஸ் காரியக் கமிட்டியை அமைக்கவும் தயாரா யிருந்தார்!"

இதை இந்தக் குட்டி ஹிட்லர் காதில் சர்தார் படேல் இரகசியமாகச் சொல்லிப் போனார் என்று நாம் நம்ப வேண்டுமாம்!




இது உண்மையாகவே இருக்கட்டும். நேரு இல்லாத காரியக் கமிட்டியைச் சர்தார் படேல் அமைக்கலாம். அதைப் பற்றித் தேசம் கவலைப்படாமலும் இருந்திருக்கலாம்.

ஆனால் படேல் போய் விட்ட பிறகு, நேரு இல்லாத காரியக் கமிட்டியை யார் அமைப்பது! மிஸ்ரா போன்றவர்கள் அமைப்பதா! இதைத் தேசம் ஒப்புக் கொள்ளுமென்று மிஸ்ரா கருதுகிறாரா! குட்டி ஹிட்லர்கள் இப்படியெல்லாம் கனவு காணலாம்; மனப்பால் குடிக்கலாம்; ஆகாசக் கோட்டை கட்டலாம். ஆனால் தேச மக்கள் இப்படிப்பட்ட குட்டி ஹிட்லர்களை நடத்த வேண்டிய விதத்தில் நடத்துவார்கள்!......

இப்படி யெல்லாம் நாம் எழுதி யிருப்பது காதில் விழுந்தால் "ஐயோ! என்னை அடிக்கும்படி சொல்லுகிறார்களே!" என்று மிஸ்ரா அலறி அழுதாலும் அழக்கூடும். டில்லி காங்கிரஸ் தலைவர்கள் சிலர் "இந்த மிஸ்ராவின் பிதற்றலைத் தடுக்க வேண்டும்" என்றார்கள். உடனே, "என்னை அடிக்கப்போகிறார்களே!" என்று மிஸ்ரா கதறத் தொடங்கி விட்டார்!

"ஜவாஹர்லால் நேரு சர்வாதிகாரியாகப் பார்க்கிறார்; அதைத் தடுத்தேயாகவேண்டும்" என்கிறார் இந்த வீர தீர மூடசிகாமணி. இவர் ஜவாஹர்லால் நேரு அவர்களை அடிக்கும்படி ஏவுகிறார் என்று நாம் அர்த்தம் செய்து கொள்ளுவதா!

"ஜவாஹர்லால் சர்வாதிகாரியாகப் பார்க்கிறார்!" என்று சொல்வதைப் போன்ற அபத்தம் வேறொன்றும் கிடையாது. ஜவாஹர்லால் நேருவிடம் நாம் காணும் குறை என்னவென்றால், அவர் தமக்கு நியாயமாக உள்ள அதிகாரத்தையும் பெருந்தன்மை காரணமாக உபயோகியாமலிருப்பதுதான். அப்படி உபயோகித்திருந்தால் டி. பி. மிஸ்ரா முதலியவர்கள் இருக்க வேண்டிய இடத்தில் இருப்பார்கள்.

டி. பி. மிஸ்ராவைப் போன்ற குட்டி ஹிட்லர் ஒவ்வொரு மாகாணத்திலும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் அடியோடு ஒழிந்தால் தான் காங்கிரஸ் ஸ்தாபனம் தூய்மை அடையும்.

# மாயவரத்தின் மானக்கேடு

**மா**யவரத்தைப் பற்றி இதற்கு முன் நாம் புகழ்ச்சியாக எழுதியிருந்ததை யெல்லாம் வாபஸ் வாங்கிக் கொள்கிறோம். அந்த நகரில் நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிச் சமீபத்தில் வந்திருக்கும் செய்தி மாயவரத்தின் பழைய பெருமையை மறைத்துக் கன்னங் கரிய அவமானப் போர்வையினால் அதை மூடிவிட்டது.

நகர சபையானது முக்கியமாகச் சாக்கடைகளைப் பரிபாலிப்பதற்காக ஏற்பட்டது. மாயவரம் நகரசபையே ஒரு சாக்கடையாக மாறிவிட்டதோ என்று நினைக்கும்படி அந்த நகர சபை நிர்வாகிகள் செய்த காரியம் துர்நாற்றத்தை வீசுகிறது.

விஷயம் என்னவென்று சொல்வதற்கே கூசுகிறோம். ஆயினும் அந்த அவமானத்தைச் சொல்லித்தான் தீர வேண்டும்.

மாயவரத்திலுள்ள முனிசிபல் ஹைஸ்கூலைப் பற்றியும் அதன் தலைமை ஆசிரியர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்களைப் பற்றியும் சில மாதங்களுக்கு முன்பு எழுதியிருந்தோம். இந்த ஹைஸ்கூல் சென்ற பல வருஷங்களாக இடைவிடாமல் எஸ். எஸ். எல். ஸி. தேர்தலில் சென்னை மாகாணத்திலேயே முதன்மை ஸ்தானம் வகித்து வந்தது. பரீட்சைக்கு அனுப்பிய மாணவர்களில் 100க்கு 80, 85, 90 விகிதம் தேறி வந்தார்கள்.

இந்த வருஷத்தில் முந்தைய முடிவுகளையெல்லாம் தூக்கி யடிக்கும்படியான முடிவு கிடைத்தது. ஆறாவது பாரத்தில் மேற்படி உயர்தரப் பள்ளியில் படித்த மாணவர்கள் 182 பேரையும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு அனுப்பினார்கள். அவர்களில் 180 பேர் பரீட்சையில் தேறினார்கள். அதாவது 100க்கு 99 விகிதம் தேறினார்கள்! இப்படித் தேறிய பிள்ளைகளில் ஒரு பையன் இந்தச் சென்னை மாகாணத்தில் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை தேறிய 60,000 மாணவர்களிலும் முதன்மையாக மார்க் பெற்றுத் தேறியிருக்கிறான்!

இது அகில இந்தியாவிலும் கேள்விப்படாத ஆச்சரியமான முடிவு. இத்தகைய முடிவுக்குக் காரணமாயிருந்தவர் மேற்படி ஹைஸ்கூலின் ஹெட்மாஸ்டர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள். இன்னொரு ஊரில் இவ்விதம் நடந்திருந்தால் ஹெட் மாஸ்டரின் உருவப் படம் திறந்தும், அவருக்குச் சிலை வைத்தும், வாழ்த்துப் பத்திரம் வாசித்துக் கொடுத்தும் கௌரவிப்பார்கள். இப்படியெல்லாம் செய்வதற்குப் புத்தியும் பெருந்தன்மையும் இல்லாவிட்டாலும் ஹெட்மாஸ்டரின் நிர்வாகத்தில் தலையிடாமல் வாலைச் சுருட்டி வைத்துக்கொண்டு சும்மா இருந்தாவது தொலைப்பார்கள்.

ஆனால் மாயவரம் நகர சபைக் கமிஷனரும் அங்கத்தினரும் என்ன செய்தார்கள் தெரியுமா? அவர்களுக்கு எப்படியோ வயிற்றெரிச்சல் உண்டாகிவிட்டது. ''நம்முடைய நிர்வாகத்தில் நடக்கும் பள்ளிக்கூடம் இப்படி முதன்மை ஸ்தானம் அடைவதா! நம்முடைய ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டருக்கு இவ்வளவு பெருமையா! இந்தப் பள்ளிக்கூடத்தைக் குட்டிச் சுவராயடித்தே தீருவோம்!'' என்று கங்கணம் கட்டிக் கொண்டார்கள் புண்ணியவான்கள். ''நாங்கள் எந்தப் பையனை எந்த வகுப்பில் சேர்த்துக் கொள்ளச் சொல்கிறோமோ, அப்படியே சேர்த்துக் கொள்ள வேண்டும்!'' என்றார்கள். இன்னும் பலவகைச் சில்லறைத் தலையீடுகளையும் தொடங்கினார்கள்.

ஆங்கில நாட்டில் பிரசித்தமாக வழங்கும் வரலாறு ஒன்று உண்டு. அநேக ஆண்டுகளுக்கு முன் அந்த நாட்டில் புகழ் பெற்ற பள்ளிக்கூடம் ஒன்று நடந்து வந்தது. அந்தப் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட ஒரு சமயம் பிரிட்டிஷ் அரசர் வந்தார். ஹெட் மாஸ்டர் அரசரை வரவேற்றார். ஆனால் அரசருக்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்யவில்லை. தலையிலிருந்து தொப்பியை எடுத்து வணங்கவில்லை. அரசருடன் வந்தவர்கள் மிக்க ஆத்திரம் அடைந்தார்கள். ஹெட்மாஸ்டரை அவருடைய நடத்தைக்குச் சமாதானம் கேட்டார்கள். ''இந்தப் பள்ளிக்கூடத்துக்குள்ளே நான்தான் அரசன். வேறு அரசர் இங்கு வருவதற்கில்லை'' என்றார் ஹெட்மாஸ்டர். இந்தப் பதில் அரசர் காதிலும் விழுந்தது. பெருந்தன்மை மிக்க அரசர் ஹெட்மாஸ்டர் கூறியதுதான் சரி என்று ஆமோதித்தார்.

ஆனால் நம் மாயவரத்து நகரசபையின் அதிகார போதை கொண்ட அங்கத்தினர்களும் அர்த்த ராத்திரியில் குடை பிடிக்கும் கமிஷனரும் என்ன சொன்னார்கள் தெரியுமா? ''இந்த மாயவரத்தின் குப்பைத் தொட்டி மகாராஜாக்கள் நாங்களே யாவோம். ஹைஸ்கூல் நிர்வாகத்திலும் நாங்கள் தலையிட்டே தீர்வோம். நாங்கள் வைத்தால் குடுமி; சிரைத்தால் மொட்டைதான்!'' என்றார்கள்.

பாவம்! அப்பாவி ஹெட்மாஸ்டர் என்ன செய்வார்! உச்சிக் குடுமியைத் தடவிப் பார்த்துக்கொண்டு பள்ளிக்கூடத்திலிருந்து வெளியேறினார். கால் காகிதத்தில் ராஜீநாமாவை எழுதி மகாராஜாதி ராஜ முனிசிபல் மகாராஜாக்களுக்கும் குப்பைத் தொட்டி ஏக சக்ராதிபதியான கமிஷனருக்கும் அனுப்பி விட்டார்.

ஹெட்மாஸ்டருக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. யோக்யதையை அறிந்து பாராட்டும் சக்தி தமிழ் நாட்டில் இல்லாமற் போய்விடவில்லை. நூறு ரூபாய் அதிக சம்பளத்துடன் அவருக்கு வேறு ஹைஸ்கூலில் தலைமை ஆசிரியர் வேலை கிடைத்து விட்டது.

மாயவரம் ஹைஸ்கூல் தன் அரிய தலைவரை இழந்தது. மாயவரம் நகர சபை தன் மானத்தை இழந்தது. மாயவரம் மக்கள் தங்களுடைய நீடித்த பெருமையை இழந்தார்கள்.

ஆனால் மாயவரம் நகர சபை அங்கத்தினரும் கமிஷனரும் ஒன்றையும் இழக்கவில்லை. இழப்பதற்கு ஏதாவது இருந்தால் அல்லவா அவர்கள் இழக்கப் போகிறார்கள்!

* * *

சென்னை அரசாங்கத்தில் கல்வி இலாகா என்பதாக ஒன்று இருக்கிறது. அந்த இலாகா

மேற்படி நிகழ்ச்சியைக் குறித்து நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை. பாவம்! கல்வியை இன்னும் எந்த முறையில் குட்டிச் சுவரா யடிக்கலாம் என்பதைப் பற்றிய யோசனையில் அந்த இலாகா ஆழ்ந்திருக்கிறது.

கனம் ஸ்தல ஸ்தாபன மந்திரி யென்றும் கனம் கல்வி மந்திரி யென்றும் இரண்டு பெரிய கனங்களைத் தாங்கிக் கொண்டிருக்கும் மந்திரிகள் இருப்பது உண்மைதான். ஆனால், அவர்களுக்கு இப்போது எவ்வளவோ கவலைகள், சங்கடங்கள். கேவலம் ஒரு நகர சபைப் பள்ளிக்கூடத்தின் கதியைப் பற்றிக் கவனித்துக் கொண்டிருக்க முடியுமா!

ஆனால் மாயவரத்தின் மற்ற ஆசிரியன்மார்கள் என்ன செய்கிறார்கள்! தஞ்சை ஜில்லா ஆசிரியர்கள் என்ன செய்கிறார்கள்! இந்த மாகாணம் முழுவதிலும் உள்ள ஆயிரக்கணக்கான உபாத்தியாயர்கள் என்ன செய்கிறார்கள்! "சம்பளம் போதாது" என்று கிளர்ச்சி செய்தால் மட்டும் போதுமா! ஆசிரியர் குலத்தின் தன்மானம் என்பதாக ஒன்றில்லையா! தங்கள் சகோதர ஆசிரியர் ஒருவர் நடத்தப்பட்ட விதத்தைக் குறித்து அவர்களுக்கு ஆத்திரம் ஒன்றும் ஏற்படவில்லையா! ஏற்பட்டிருந்தால், அதைக் குறித்து என்ன செய்கிறார்கள்! என்ன செய்யப் போகிறார்கள்!

# சங்கீதம் ஒரு தமாஷ் விஷயமா?

சங்கீத சபைக்காரர்கள் தூங்கி விட்டார்கள் என்று ஆகஸ்டு 19உ இதழில் நாம் குறிப்பிட்டிருந்ததைக் கோபாலபுரம் சங்கீதச் சபைக் காரியதரிசி பலமாக ஆட்சேபிக்கிறார். "இல்லை; நாங்கள் விழித்துக்கொண்டு தானிருக்கிறோம்" என்று சொல்லி, அதற்கு அத்தாட்சியாகப் பின்வரும் கடிதத்தையும் எழுதியிருக்கிறார் :—

"ஆகஸ்டு 19உ இதழில் சங்கீதத்திற்கும் பரத நாட்டியத்திற்கும் இப்பொழுதிருந்து வரும் தமாஷா வரியை எடுத்துவிட வேண்டும் என்று தாங்கள் எழுதியுள்ளதை நான் பெரிதும் வரவேற்கிறேன். தமாஷா வரியால் அந்தக் கலைகள் பாதிக்கப்படுகின்றன என்பதை நான் சொந்த அனுபவத்திலிருந்து கூற முடியும். கோபாலபுரத்தில் நாங்கள் புதிதாக ஒரு சங்கீத சபையை ஆரம்பித்துச் சில மாதங்களாக நடத்தி வருகிறோம். அதில் சுமார் 300 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கும் சந்தாவின் மூலம் சபைக்குக் கிடைக்கும் வருமானத்தில் எட்டில் ஒரு பாகத்தைத் தமாஷா வரியாகக் கொடுத்துவிட வேண்டி யிருக்கிறது. சந்தா வசூலானாலும் சரி பாக்கியாக இருந்தாலும் சரி இந்த வரியை மட்டும் ஜரூராகக் கட்டியாக வேண்டும். கட்டுவதோடல்லாமல் டிக்கட்டுகளுக்குத் தமாஷா வரி முத்திரை போட்டு வருவதற்கும், கணக்குகளைக் கச்சேரி நடந்த மறுநாளன்றே கொண்டுபோய் ஒப்புவிப்பதற்கும் அதே வேலையாக ஒருவர் தயாராக இருக்க வேண்டும். இவற்றைச் சரிவரச் செய்வதற்குச் சம்பளம் கொடுத்து ஒருவரை நியமிக்க வேண்டியிருக்கிறது. கச்சேரிகளை விளம்பரம் செய்தல், டிக்கட்டுகள் அடித்தல், ஒலிபெருக்கி ஏற்பாடு செய்தல் முதலான தவிர்க்க முடியாத செலவுகளை யெல்லாம் தள்ளிக் கணக்குப் பார்த்தால் வித்வான்களுக்குப் போதிய சன்மானம் அளிக்க முடிவதில்லை. இதனால் நல்ல கச்சேரிகள் ஏற்படுத்த முடிவதில்லை.

சங்கீதமும் நாட்டியமும் நமது நாட்டின் சிறந்த இரண்டு கலைகளாகும். அவற்றைப் போற்றி வளர்ப்பதிலும், கலைஞர்களை ஆதரிப்பதிலும், சங்கீத சபைகள்தான் முக்கிய பங்கு கொண்டிருக்கின்றன. ஆனால் அவைகளின் பொருள் நிலைமையை உத்தேசித்துப் பார்த்தால் பல சபைகள் தொடர்ந்து சேவை செய்ய முடியுமென்று தோன்றவில்லை. சங்கீத சபைகளால் கிடைக்கும் தமாஷா வரி அரசாங்கத்திற்குப் பெரியதோர் வருவாயாக இருக்க முடியாது. ஆனால் அந்தத் தொகை சங்கீத சபைகளுக்கு நல்ல உதவியாக இருக்கும். கர்நாடக சங்கீதக் கல்லூரி நியமித்து அதன் மூலமாக நமது சங்கீதத்தை வளர்க்க அரசாங்கம் முயற்சி செய்துவருகிறது; நடனக் கலையை அதில் பாடமாக இனிமேல் வைக்கத் திட்டமிட்டிருப்பதாகவும் தெரிகிறது. அக் கலைகளைப் பயின்ற வித்வான்களுக்கு ஆதரவு தரவேண்டிய சபைகள் நல்ல நிலைமையில் இல்லாவிட்டால் அவை வளர முடியாது. ஆதலால் சங்கீத—பரத நாட்டியக் கச்சேரிகளுக்குத் தமாஷா வரியை நீக்கும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

கோபாலபுரம்
20—8—51

வி. என். ராஜன்

மேற்படி கடிதத்தைத் தொடர்ந்து, இன்னும் பல சங்கீத சபைக்காரர்களும் விழித்துக்கொண்டு தானிருக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சிகள் கிடைத்திருக்கின்றன. கரூரில் சென்ற ஆகஸ்டு மாதம் 24-ம் தேதி பல சங்கீத சபைகளின் பிரதிநிதிகள் கூடினார்கள். கரூர் நாத கான சபை, தஞ்சாவூர் தியாகப் பிரம்ம சபை, திருச்சி பைன் ஆர்ட்ஸ், பொன்மலை சங்கீத சபை, திண்டுக்கல் சங்கீத சபை, கும்பகோணம் வாணி விலாச சபை ஆகியவற்றின் பிரதிநிதிகள் விஜயம் செய்திருந்த மேற்படி கூட்டத்தில் சில முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றினார்கள். கர்நாடக சங்கீதத்துக்குத் தற்சமயம் நாலாபுறமும் சூழ்ந்து வரும் அபாயங்களை எடுத்துக் காட்டி, சங்கீத சபைகள் நடத்தும் சங்கீத—நடனக் கச்சேரிகளுக்குத் தமாஷா வரியை எடுத்து உதவி செய்யும்படி அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். சென்னைக் காங்கிரஸ் மந்திரிகள் நமது புராதனக் கலைகளைக் காப்பாற்றுவதற்கு இந்தச் சிறிய உதவியைச் செய்து கலை அன்பர்களின் நன்றியைப் பெற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

# பொன்னியின் செல்வன்

## கல்கி

### இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## யானைப் பாகன்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால்—இந்தக் கதை நடந்த காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால்,—வலஹம் பாஹு என்னும் சிங்கள அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய காலத்திலும் தமிழர் படை இலங்கையின் மீது படையெடுத்துச் சென்றது. அப்போது வலஹம்பாஹு என்பான் தலைநகரிலிருந்து தப்பி ஓடித் தம்பளை என்னுமிடத்திலிருந்த மலைக்குகையில் ஒளிந்து கொண்டிருந்தான். பிறகு அவன் மீண்டும் படை திரட்டிக்கொண்டு சென்று அநுராதபுரத்தைக் கைப்பற்றினான். அவனுக்கு அபயமளித்திருந்த மலைக் குகையை மேலும் குடைந் தெடுத்துக் கோயிலாக்கினான். புத்தர் பெருமானிடம் தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுவதற்காக அந்தக் குகைக்குள்ளே பெரிதும் சிறிதுமாய்ப் பல புத்தர் சிலைகளை நிர்மாணிக்கச் செய்தான். நூற்றுக் கணக்கான புத்தர் சிலைகளை நிர்மாணித்த சிற்பிகளுக்குத் தங்கள் சிற்பத் திறனை முழுதும் காட்டி விட்டோம் என்ற திருப்தி ஏற்படவில்லை. எனவே ஹிந்து தெய்வங்களின் படிமங்கள் சிலவற்றையும் புத்தர் சிலைகளுக்கிடையில் நிர்மாணித்து வைத்தார்கள். அந்த அற்புதமான சிற்பக்கலை அதிசயங்களை இன்றைக்கும் தம்பளை என்னும் ஊரில் உள்ள குகைக்கோயிலில் காணலாம்.

வந்தியத்தேவன் அந்தப் புண்ணிய ஸ்தலத்துக்குள் பிரவேசித்த போது ஒரு புது உலகத்துக்குள் வந்து விட்டதாகவே அவனுக்குத் தோன்றியது. புது மலர்களின் நறுமணம் அவனுக்கு மயக்கத்தை அளித்தது. வீதி மூலைகளில் தாமரை மொட்டுக்களும் செண்பக மலர்களும் குப்பல் குப்பலாகக் குவிக்கப் பட்டிருந்தன. பக்தர்கள் அம்மலர்களை வாங்கி அழகிய ஓலைக் கூடைகளில் எடுத்துக் கொண்டு கோயிலை நோக்கிச் சென்றார்கள். ஸ்திரீகளும் புருஷர்களும் அடங்கிய அந்த பக்தர் கூட்டங்கள் தெருக்களை அடைத்துக் கொண்டு சென்றன. காவித் துணி அணிந்த புத்த சந்நியாசிகளும் அங்கங்கே காணப்பட்டார்கள். "சாது சாது" என்ற பெருங் கோஷம் பக்தர் கூட்டத்திலிருந்து எழுந்தது.

இவை யெல்லாம் வந்தியத்தேவனுக்கு மிக்க வியப்பை அளித்தன. ஆழ்வார்க்கடியானைப் பார்த்து "நாம் யுத்த கேந்திரத்துக்கு வருவதாக எண்ணினோம். இது புத்த க்ஷேத்திரமாக அல்லவா இருக்கிறது?" என்றான்.

"ஆம், அப்பா! ஆயிரம் வருஷமாக இது பிரசித்தி பெற்ற புத்த க்ஷேத்

திரமாயிற்றே?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஆனால் இது சோழ சைன்யத்தின் வசத்திலுள்ளது என்று சொன்னீரே?"

"ஆமாம்; இப்போதும் அப்படித்தான் சொல்கிறேன்."

"சோழ வீரர்கள் யாரையும் இங்கே காணுமே?"

"ஊருக்கு வெளியில் படை வீடுகளில் இருக்கிறார்கள். அப்படி இளவரசருடைய கட்டளை."

"எந்த இளவரசர்?"

"ஏன்? நாம் யாரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறோமோ, அந்த இளவரசர்தான்!"

"அதைப்பற்றி உம்மைக் கேட்க வேண்டுமென்று இருந்தேன். இளவரசரை இங்கே தேடிவிட்டு 'இல்லை' என்று கண்டு பார்த்திபேந்திரன் திரும்பிப் போய்க் கொண்டிருக்கிறானே? அவரை நாம் இங்கே மறுபடியும் தேடுவதில் என்ன பயன்?"

"அந்தப் பல்லவன் 'இல்லை' என்று சொன்னதனால் நான் நம்பி விடுவேனா? நானே தேடிப் பார்த்துத்தான் தெரிந்து கொள்வேன். இரணியன் 'ஹரி' என்கிற தெய்வம் இல்லை என்று சொன்னான். அதைப் பிரஹலாதன் நம்பி விட்டானா?"

"ஓ வீர வைஷ்ணவரே! நம்முடைய நாட்டில் சைவர்களுடன் ஓயாமல் சண்டை பிடித்துக் கொண்டு வந்தீரே? இங்கே இத்தனை புத்த சந்நியாசிகள் போகிறார்கள், நீர்பாட்டுக்குச் சும்மா வருகிறீரே? என்ன காரணம்? எதிரிகளின் கூட்டம் அதிகமாயிருப்பதைக் கண்டு பயந்து போய் விட்டீரா?"

"தம்பி! பயம் என்பது என்ன? அது எப்படி யிருக்கும்?"

"கருப்பாய், பூதாகாரமாய், யானையவ்வளவு பெரிதாக இருக்கும். நீர் பார்த்ததே யில்லையா?"

"இல்லை" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிவிட்டு, வீதி ஓரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த இரண்டு மனிதர்களை அணுகினான். அவர்கள் தமிழர்கள் போல் தோன்றினார்கள். அவர்களிடம் சிறிது நேரம் ஏதோ பேசி விட்டு ஆழ்வார்க்கடியான் திரும்பி வந்தான்.

"வைஷ்ணவரே! அவர்களிடம் என்ன கேட்டீர்? விஷ்ணு பெரியவரா, புத்தர் பெரியவரா என்று கேட்டீரா? இந்த ஊரில் யாரைக் கேட்டாலும் 'புத்தர் பெரியவர்' என்றுதான் சொல்வார்கள். ஒவ்வொரு புத்தர் சிலையும் எவ்வளவு பிரம்மாண்டமாய் இருக்கிறது, பார்க்கவில்லையா?"

"தம்பி! என்னுடைய வீர வைஷ்ணவத்தை யெல்லாம் இராமேசுவரத்தில் மூட்டை கட்டிவைத்துவிட்டு இங்கே ராஜ காரியமாக வந்திருக்கிறேன், தெரிகிறதா?"

"பின்னே அந்த மனிதர்களிடம் என்ன கேட்டீர்? இளவரசரைப் பற்றி விசாரித்தீரா?"

"இல்லை; இந்த ஊரில் இன்றைக்கு என்ன விசேஷம் என்று கேட்டேன்."

"அவர்கள் என்ன சொன்னார்கள்?"

"இன்றைக்கு இங்கே சீன யாத்திரிகர்கள் இரண்டு பேர் வரப்போகிறார்களாம்; அதை முன்னிட்டுப் புத்த விஹாரத்தில் உற்சவம் நடக்கிறதாம்; அதனாலேதான் ஊரில் இந்தக் கோலாகலம் என்று தெரிவித்தார்கள்."

"சீன யாத்திரிகர்கள் எங்கிருந்து வருகிறார்களாம்?"

"நேற்று இங்கு வந்துவிட்டுச் சிம்மகிரிக்குப் போனார்களாம். சிம்மகிரியிலிருந்து இப்போது வந்து கொண்டிருக்கிறார்கள் என்றும் இன்னும் சற்று நேரத்தில் இங்கே வந்து விடுவார்கள் என்றும் தெரிவித்தார்கள்."

"சிம்மகிரி எங்கே இருக்கிறது?"

"இங்கிருந்து காத தூரத்தில் இருக்கிறது. இன்னும் சிங்களவர் வசத்தில் இருக்கிறது. பகல் வேளையாயிருந்தால் இங்கிருந்தே பார்க்கலாம். சிம்மகிரி குன்றின் உச்சியில் ஒரு பலமான கோட்டை இருக்கிறது. அங்கேயுள்ள ஒரு குகையில் அற்புதமான அழியா வர்ணச் சித்திரங்கள் இருக்கின்றன. அந்தச் சித்திரங்களைப் பார்க்கத்தான் சீன யாத்திரிகர்கள் அங்கே போயிருக்க வேண்டும். குன்றில் ஏறி இறங்குவதற்குப் பெரிதும் கஷ்டப் பட்டிருப்பார்கள்.... அதோ பார்!"

ஆழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டிய இடத்தில் அலங்கரித்த பெரிய யானை ஒன்று வந்து கொண்டிருந்தது.

அதன் அம்பாரியில் இரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய தோற்றமும் உடையும் அவர்கள்தான் சீன யாத்திரிகர்கள் என்று புலப்படுத்தின. யானைப் பாகன் ஒருவன் கையில் அங்குசத்துடன் யானையின் கழுத்தின் மீது வீற்றிருந்தான். யானையைச் சுற்றிச் சூழ்ந்து வந்த ஜனங்கள் பலவித ஆரவார கோஷங்களைக் கிளப்பினார்கள்.

"பார்த்தாயா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"பார்த்தேன்; பார்த்தேன்! அம்மா! எவ்வளவு பெரிய யானை? பக்கத்திலே எங்கேயாவது பள்ளமிருக்கிறதா என்று பார்க்கலாமா?"

"வேண்டாம், வேண்டாம். வீதியில் சற்று ஒதுங்கி நின்றால் போதும்."

அவ்விதமே அவர்கள் யானை நெருங்கி வந்ததும் வீதி ஓரமாக ஒதுங்கி நின்றார்கள்.

யானை அவர்களைக் கடந்து சென்றது; ஜனக் கூட்டமும் யானையைத் தொடர்ந்து சென்றது.

வந்தியத்தேவன் அம்பாரியில் வீற்றிருந்த யாத்திரிகர்கள் மீதே கண்ணாயிருந்தான். புத்தர்களின் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிப்பதற்காக எவ்வளவோ தூரம் பிரயாணம் செய்து எத்தனையோ கடல்களைக் கடந்து வந்த அந்தச் சீனர்களின் பக்தியை நினைத்து வியந்தான். அவர்களுக்கு இங்கே இவ்வளவு உபசாரங்கள் நடப்பது நியாயமான காரியந்தான். ஆனால் யுத்தம் நடந்துகொண்டிருக்கும் காலத்திலும் இவர்கள் யாத்திரைக்குப் பங்கமில்லாமல் நடப்பது எவ்வளவு அதிசயமானது? இளவரசர் அருள்மொழி வர்மரின் ஏற்பாடாகத்தானிருக்க வேண்டும். இவ்வளவு பெருந் தன்மையான காரியங்களைச் செய்யக் கூடியவர் அவர்தான். ஆனால் இப்போது அவர் எங்கே இருப்பார்? அவரைத் தேடிப் பிடிப்பது சாத்தியமா? இந்த வைஷ்ணவனோடு இவ்வளவு கஷ்டத்துடன் பிரயாணம் செய்து வந்தது வீணாகி விடுமோ?...

"தம்பி! பார்த்தாயா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"பார்த்தேன்."

"என்ன தெரிந்தது?"

"சீன யாத்திரிகர்களின் முகம் சப்பையாகத் தெரிந்தது. அவர்களுடைய உடை விசித்திரமாயிருந்தது...."

"யாத்திரிகர்களைப் பற்றி நான் கேட்கவில்லை."

"பின்னை?"

"யானைப் பாகனைக் கவனித்துப் பார்த்தாயா என்று கேட்டேன்."

"யானைப் பாகனையா? நான் கவனிக்கவே யில்லையே?"

"அழகா யிருக்கிறது. அந்த யானைப் பாகனுடைய பார்வை தற்செயலாக நம் பேரில் விழுந்ததும் அவனுடைய கண்களில் ஜொலித்த ஒளியைக் கவனிக்கவில்லையா?"

"அது என்ன? யானைப் பாகனுடைய கண்களில் தீவர்த்தி போட்டிருக்கிறதா ஜொலிப்பதற்கு?"

"நல்ல ஆள் நீ! உன் அஜாக்கிரதையை நினைத்து ஆச்சரியப்படுவதா அல்லது இவ்வளவு முக்கியமான காரியத்தை உன்னை நம்பி ஒப்புவித்து அனுப்பினானே, அந்த இளைய பிராட்டியின் காரியத்தைக் குறித்து ஆச்சரியப்படுவதா என்று தெரியவில்லை. போனாற்போகட்டும். என்னோடு வா!"

யானைக்கும் யானையைச் சூழ்ந்து நின்ற கூட்டத்துக்கும் பின்னால் சற்று தூரத்தில் இவர்களும் தொடர்ந்து போனார்கள்.

**பு**த்த விஹாரத்தின் வாசலில் வந்ததும் யானை நின்றது. பிறகு யானைப் பாகன் ஏதோ சொல்லவும் யானை மண்டியிட்டுப் படுத்தது. யாத்திரிகர்கள் இறங்கினார்கள். புத்த விஹாரத்தின் வாசலில் கும்பலாக நின்ற புத்த பிக்ஷுக்கள் சீன யாத்திரிகர்களை வரவேற்றார்கள். சங்கங்கள் முழங்கின. ஆலாட்சமணிகள் ஒலித்தன. விஹாரத்தின் மேல் மாடத்திலிருந்து மலர் மாரி பொழிந்தது. "புத்தம் சரணம் கச்சாமி" என்ற கோஷம் வானளாவியது. சீன யாத்திரிகர்கள் இருவரும் விஹாரத்துக்குள் சென்றார்கள். கூட வந்தவர்களிலும் பெரும்பாலோர் அவர்களைத் தொடர்ந்து விஹாரத்துக்குள்ளே சென்றார்கள்.

யாத்திரிகர்கள் இறங்குவதற்கு முன்பே யானையின் கழுத்திலிருந்து



இறங்கி விட்ட யானைப் பாகன் யானையை எழுப்பி நடத்திக் கொண்டு சென்றான். சற்றுத் தூரத்தில் நின்றிருந்த நாலு பேரைப் பார்த்தான். அவர்களில் ஒருவனிடம் யானையை ஒப்புவித்தான். இன்னும் ஒருவனிடம் ஆழ்வார்க்கடியானைச் சுட்டிக் காட்டி ஏதோ சொன்னான். மற்ற இருவரையும் அழைத்துக் கொண்டு சென்று சிறிது நேரத்தில் வீதியின் ஒரு திருப்பத்தில் திரும்பி மறைந்தான்.

யானைப் பாகன் எந்த ஆளுக்கு ஆழ்வார்க்கடியானைச் சுட்டிக் காட்டினானோ அவன் இவர்கள் நின்ற இடத்தை நோக்கி வந்தான். ஆழ்வார்க்கடியானிடம் மெல்லிய குரலில் "ஐயா! என்னுடன் வருவதற்குச் சம்மதமா?" என்று கேட்டான்.

"அதற்காகவே காத்திருக்கிறோம்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அடையாளம் ஏதாவது உண்டா?"

சேனாதிபதி கொடுத்திருந்த கொடும்பாளூர் முத்திரை மோதிரத்தை ஆழ்வார்க்கடியான் காட்டினான்.

"சரி, என் பின்னால் வாருங்கள்" என்று சொல்லி விட்டு அவன் முன்னால் செல்ல, இவர்கள் பின் தொடர்ந்து சென்றார்கள். ஊரைத் தாண்டி அப்

பால் சென்றதும் குறுகிய காட்டுப்பாதை ஒன்று தென்பட்டது. அதன் வழியே சிறிது தூரம் சென்றதும் பாதையிலிருந்து சற்று விலகியிருந்த ஒரு பாழும் மண்டபத்தை அடைந்தார்கள். அதில் சிறிது நேரம் காத்திருக்கவேண்டும் என்று அவர்களை அழைத்து வந்தவன் தெரிவித்தான். பிறகு அவன் ஒரு மரத்தின் மேலேறி அவர்கள் வந்த வழியைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினான்.

"இதெல்லாம் என்ன மர்மம்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"எல்லாம் சீக்கிரத்தில் புரிந்து விடும். கொஞ்சம் பொறுத்திரு!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

அந்தப் பாழும் மண்டபத்தில் பின்னால் இரண்டு குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. குதிரைகள் இரண்டுதான் என்பது வந்தியத்தேவனுக்குக் கொஞ்சம் கவலையை உண்டாக்கியது.

யானைப் பாகனைப் பற்றிய மர்மம் என்னவாயிருக்கும்? அவனுடைய முகத்தை ஒரே ஒரு கணம் வந்தியத்தேவன் கண்கள் ஏறிட்டுப் பார்த்திருந்தன. அப்புறம் சீன யாத்திரீகர்களிடம் அவன் கவனம் சென்றுவிட்டது. யானைப் பாகனுடைய முகத்தை நினைத்துப் பார்க்க ஆனமட்டும் முயன்றான். ஒன்றும் நினைவுக்கு வரவில்லை.

"வைஷ்ணவரே! அந்த யானைப் பாகன் யார்? எனக்குச் சொல்லக் கூடாதா?"

"யாராயிருக்கும்? நீயே ஊகித்துப் பார், தம்பி!"

"யானைப் பாகன்தான் பொன்னியின் செல்வரா?"

"அவருடைய கண்களில் ஒருகணம் ஜொலித்த பிரகாசத்திலிருந்து அப்படித்தான் தோன்றியது."

"உம்மைப் போல் மற்றவர்களும் அவரைத் தெரிந்து கொண்டிருக்க மாட்டார்களா?"

"மாட்டார்கள். சீனத்திலிருந்துவந்த யாத்திரீகர்களுக்கு இளவரசர்யானைப் பாகராயிருப்பார் என்று யார் எதிர்பார்ப்பார்கள்? மேலும் இந்தஊரிலுள்ள ஜனங்கள் இளவரசரைப் பார்த்ததும் இல்லை."



"சீன யாத்திரிகர்கள் சிம்மகிரியிலிருந்து வந்தார்கள் என்று சொன்னீர் அல்லவா?"

"ஆமாம்."

"சிம்மகிரி இன்னும் சிங்களவர் வசத்தில் இருக்கிறது என்று நீர் சொல்லவில்லையா?"

"சொன்னேன்."

"பின்னே, எதிரிகளுக்கு மத்தியில் போய் விட்டா இளவரசர் திரும்பி வருகிறார்?"

"சிம்மகிரி மட்டும் என்ன? பகை வருக்குட்பட்ட பிரதேசத்தின் மத்தியில் உள்ள மாதுளியங்கானை, சமந்த கூடம் முதலிய க்ஷேத்திரங்களுக்கும் இளவரசர் சீன யாத்திரிகர்களுடன் போய்த் திரும்பியிருக்கிறார்."

"எதற்காக அவ்வளவு பெரிய அபாயத்துக்கு உட்பட்டார்?"

"அந்த க்ஷேத்திரங்களையும் அங்கேயுள்ள சிற்ப சித்திர அதிசயங்களையும் பார்ப்பதில் உள்ள அளவு கடந்த ஆசையினால் தான்!"

"நல்ல ஆசை! நல்ல இளவரசர்! இத்தகைய விளையாட்டுப் புத்தியுள்ளவரையா முடி மன்னர் வணங்கும் ஏக சக்ராதிபதியாவார் என்று அந்தக் குடந்தை ஜோஸியர் சொன்னார்?"

"அவ்வாறு குடந்தை ஜோஸியர் சொன்னாரா, தம்பி?"

"நீரும் அதை நம்புகிறீரா?"

"நான் ஜோசியத்தை நம்பவில்லை. ஜோசியம் பார்க்க வேண்டிய அவசியமும் எனக்கு இல்லை."

"பின்னே என்ன?"

"ஜோசியம் பார்க்காமலேயே எனக்கு நிச்சயமாய்த் தெரியும்......"

திடீரென்று குதிரைகளின் குளம்புச் சத்தம் கேட்டது. அவர்கள் இருந்த இடத்தை நோக்கிச் சத்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. மரத்தின் மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்தவன் அவசரமாகக் கீழே இறங்கினான். இரண்டு குதிரைகளையும் பிடித்துக் கொண்டு வந்தான். ஒன்றில் தான் ஏறிக் கொண்டான். ஆழ்வார்க்கடியானை இன்னொன்றின் மேல் ஏறிக் கொள்ளச் சொன்னான். "சற்று நேரத்தில் இந்தப் பாதையுடன் சில குதிரைகள் போகும். அவற்றின் பின்னோடு நாமும் தொடர்ந்து போக வேண்டும்" என்றான்.

வந்தியத்தேவன் "எனக்குக் குதிரை?" என்று கேட்டான்.

"இவரை மட்டுந்தான் அழைத்து வரும்படி எனக்குக் கட்டளை."

"யாருடைய கட்டளை?"

"அதைச் சொல்ல எனக்கு அதிகாரம் இல்லை."

"இளவரசரை நான் உடனே பார்த்தாகவேண்டும். மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன்."

"அதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது, ஐயா!"

ஆழ்வார்க்கடியான் "தம்பி! கொஞ்சம் பொறுமையாயிரு! நான் போய் இளவரசரிடம் சொல்லி உன்னையும் அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்கிறேன்" என்றான்.

"வைஷ்ணவரே! நான் கொண்டு வந்திருக்கும் செய்தி மிக முக்கியமானது, மிக அவசரமானது என்று உமக்குத் தெரியாதா!"

"அந்த ஓலையை என்னிடம் கொடு; நான் கொடுத்து விடுகிறேன்."

"அது முடியாது."

"அப்படியானால் கொஞ்சம் பொறுத்திரு; வேறு வழி இல்லை!"

"வேறு வழி இல்லையா?"

"இல்லவே இல்லை!"

வந்தியத்தேவனுடைய உள்ளம் குமுறியது. ஆழ்வார்க்கடியானை இளவரசரிடந்தான் அழைத்துப் போகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆழ்வார்க்கடியான் அவரிடம் என்ன சொல்கிறான் என்பதைச் சேநாதிபதி கவனிக்கச் சொல்லியிருக்கிறார். அது முடியாமற் போய் விடுமே?

குதிரைகள் நெருங்கி வந்தன; அவர்கள் இருக்கும் இடத்தைக் கடந்து சென்றன: மின்னல் மின்னும் வேகத்தில் பறந்து சென்றன.

மண்டபத்தில் குதிரைகள் மீது ஆயத்தமாயிருந்த இருவரும் குதிரையின் முகக் கயிற்றை இழுத்துக் குலுக்கிப் புறப்படத் தூண்டினார்கள். அச்சமயத்தில் யாரும் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. குதிரை மேலிருந்த மனிதனுடைய ஒரு காலை வந்தியத்தேவன் பிடித்து ஒரு எத்து

எத்தித் தள்ளினான். அந்த மனிதன் தடால் என்று கீழே விழுந்தான். வந்தியத்தேவன் குதிரை மீது தாவி ஏறினான். குதிரை பறந்தது. தொடர்ந்து ஆழ்வார்க்கடியானுடைய குதிரையும் பறந்தது. கீழே விழுந்த வீரன் கூச்சலிட்டு விட்டு உறையிலிருந்த கத்தியை எடுத்து எறிந்தான். வந்தியத்தேவன் தலை குனிந்து குதிரையின் முதுகோடு ஒட்டிப் படுத்துக் கொண்டான். வீரன் எறிந்த கத்தி வேகமாகச் சென்று ஒரு மரத்தில் ஆழமாய்ப் பாய்ந்தது. குதிரைகள் இரண்டும் காற்றாய்ப் பறந்து சென்றன.

முன்னால் சென்ற மூன்று குதிரைகளையும் பின் தொடர்ந்து ரொம்பவும் நெருங்காமலும் ரொம்பவும் பின் தங்காமலும் இந்த இரண்டு குதிரைகளும் சென்றன. "நல்ல வேலை செய்தாய், தம்பி!" என்று ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனை உற்சாகப்படுத்தினான். ஆனால் வந்தியத்தேவன் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. இதன் முடிவு என்ன ஆகப் போகிறதோ என்று அவன் உள்ளம் கவலையில் ஆழ்ந்திருந்தது. ஒரு பெண்ணின் வார்த்தையின் பொருட்டு எதற்காகக் கடல் கடந்து இந்தத் தூர தேசத்தில் வந்து, இத்தகைய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டோம் என்ற சிந்தனையும் உதித்தது.

குதிரைகள் வாயுவேக மனோவேகமாய்க் குறுகிய காட்டுப் பாதையில் போய்க் கொண்டிருந்தன. (தொடரும்)

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## எகிப்து—7

ஜக்லூல் பாஷா சர்க்கார் ராஜிநாமா செய்ததிலிருந்து எகிப்து இடைவிடாத அரசியல் கொந்தளிப்புக்கு இலக்காக நேர்ந்தது. எகிப்தில் இராணுவ நிர்வாகமும் போலீஸ் நிர்வாகமும் பிரிட்டிஷாரின் கையில் இருந்தன. அதனால்தான் புவாட் மன்னர், பார்லிமெண்டைக் கலைத்துவிட்டு, தம் இஷ்டப்படி நிர்ப்பயமாக நடந்து கொள்ள முடிந்தது.

எனினும் 1925-ம் வருஷம் மறுபடியும் தேர்தல்கள் நடந்து, பார்லிமெண்டு கூடியது. அப்போது கூட வப்துக் கட்சியினருக்கே பெரும்பாலான ஸ்தானங்கள் கிடைத்தன. மேற்படி பார்லிமெண்டின் முதல் நாள் கூட்டத்தில் ஜக்லூல் பாஷா அந்தச் சபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதைப் பிரிட்டிஷாரோ, புவாட் மன்னரோ விரும்பவில்லை. எனவே புதிய பார்லிமெண்டின் ஆயுள் ஒரே நாளில் முடிந்து விட்டது! அதாவது புவாட் மன்னர் உடனே மீண்டும் பார்லிமெண்டைக் கலைத்துவிட்டு சர்வாதிகாரியானார்!

பிறகு ஒரு வருஷம் வரையில் எகிப்து சர்க்கார் நிர்வாகம் பார்லிமெண்டு இராமலேயே நடைபெற்றது.

அதனால் எகிப்து மக்கள் மிகுந்த ஆத்திரம் அடைந்தனர். அந்த ஆத்திரத்தை ஜக்லூல் பாஷா எகிப்துக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ள முற்பட்டார். புவாட் மன்னரின் செய்கையால் கொதிப்படைந்த பல்வேறு கோஷ்டியினரிடையே ஒற்றுமையும் ஒத்துழைப்பும் ஏற்படும்படி செய்தார்.

அதன் பலனாக, புவாட் மன்னரின் தடையுத்தரவைப் புறக்கணித்து விட்டுப் பார்லிமெண்டு கூடியது. பார்லிமெண்டுக் கட்டிடத்தில் துருப்புகள் வைக்கப்பட்டிருந்ததால், அங்கத்தினர்கள் வேறு ஓரிடத்தில் கூடினார்கள்.

எனவே புவாட் மன்னர், ஏற்கெனவே அங்கீகரிக்கப்பட்டிருந்த அரசியலின் சட்டதிட்டங்களையே தமது இஷ்டப்படி மாற்றி அமைக்கும் வேலையில் ஈடுபட்டார். பார்லிமெண்டும் பார்லிமெண்டில் உள்ள கட்சிகளும் தம்முடைய அதிகாரத்துக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்ள வேண்டும் என்பதே மன்னரின் நோக்கம். அவர் அதற்கு உகந்தவாறு அரசியல் திட்டத்தை மாற்ற முற்பட்டார்.

எனினும் புவாட் மன்னரின் விபரீத முயற்சியைக் கண்டித்து தேசம் முழுதும் கூக்குரல் எழுந்தது. மன்னரின் திட்டப்படி நடக்கவிருந்த தேர்தலைச் சகலரும் பகிஷ்காரம் செய்ய ஆயத்தமாயினர். எனவே புவாட் மன்னர் தமது நோக்கத்தைக் கைவிட வேண்டியதாயிற்று.

ஒரு வருஷத்துக்குப் பிறகு மறுபடியும் நடந்த பார்லிமெண்டுத் தேர்தலில் ஜக்லூல்

பாஷா கட்சியினருக்கு இருநூறு ஸ்தானங்களும் எதிர்க் கட்சியினருக்குப் பதினாலு ஸ்தானங்களும் கிடைத்தன. ஜக்லூல் பாஷாவுக்கு எகிப்து மக்களின் ஏகோபித்த ஆதரவு இருந்தது என்பதற்கு மேற்படி தேர்தல் முடிவைக் காட்டிலும் வேறு என்ன ஆதாரம் வேண்டும்?

ஜக்லூல் பாஷா கட்சியினர் அவ்வளவு அதிக ஸ்தானங்களைப் பெற்றிருந்தும் கூட, அத்தகைய செல்வாக்கு உள்ள தேச பக்தர் பிரதம மந்திரியாக வருவதை, அப்போது எகிப்தில் பிரிட்டிஷ் கமிஷனராக இருந்த லார்டு லாயிட் விரும்பவில்லை!

லார்டு லாயிட் ஏற்கெனவே இந்தியாவில் மாகாண கவர்னராக இருந்தவர். இந்திய சுதந்திரப் போராட்டத்தை அடக்குவதில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்ட மகானுபாவர்.

ஜக்லூல் பாஷாவின் சம்பந்தம் இல்லாமலே புதிய சர்க்கார் ஏற்பட்டதெனினும் அந்த அரசாங்கம் வப்துக் கட்சிக்கு உட்பட்டே இருக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இங்கிலையிலே, 1927-ம் ஆண்டில் எகிப்தின் இணையற்ற தலைவராக விளங்கிய ஜக்லூல் பாஷா தமது எழுபதாம் வயதில் காலமானார். அவருக்குப் பிறகு வப்துக் கட்சித் தலைவர் பதவியை எகிப்து மக்களின் மதிப்புக்குப் பாத்திரரான முஸ்தபா நஹாஸ் பாஷா ஏற்றுக் கொண்டார். பிறகு அவரே பிரதம மந்திரி பதவியையும் வகிக்கலானார்.

நஹாஸ் பாஷா பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்ட பின் அவருக்கும் பிரிட்டிஷார், புவாட் மன்னர் கோஷ்டியினருக்கும் மீண்டும் தகராறு உண்டாயிற்று.

எகிப்து மக்களுக்குத் துப்பாக்கி வைத்துக் கொள்ள உரிமை வேண்டும் என்று நஹாஸ் பாஷா கோரினார். அதற்கான மசோதாவையும் பார்லிமெண்டில் கொண்டு வந்தார். எகிப்து மக்களுக்கு அத்தகைய உரிமை அளிப்பதைக் கூட பிரிட்டிஷாரால் சகிக்க முடியவில்லை. உடனே பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் அலெக்ஸாண்டிரியா துறைமுகத்துக்கு வந்து சேர்ந்தன. நஹாஸ் பாஷாவையும் எகிப்தியர்களையும் பயமுறுத்துவதற்காகத்தான்!

அந்த நிலைமையை முற்றவிட நஹாஸ் பாஷா விரும்பவில்லை. அவர் ஆயுத உரிமை மசோதாவை அடுத்த பார்லிமெண்டுக் கூட்டம் வரையில் ஒத்தி வைக்க இசைந்தார்.

இருந்தாலும் அவ்வித மசோதா ஒன்றைப் பார்லிமெண்டில் கொண்டு வரத் துணிந்த நஹாஸ் பாஷாவுக்குப் பிரிட்டிஷார் ஒரு சரியான 'பாடம்' கற்பிக்கத் தீர்மானித்தனர்.

நஹாஸ் பாஷா சிறந்த தேச பக்தர்; சிறிய ஒழுக்கம் உள்ளவர். அப்படி யிருந்தும் அவர்மீது திடீரென்று ஒரு வழக்கு தொடரப்பட்டது. அவர்மீது போலிக் குற்றச் சாட்டுகள் உருவாயின. அவற்றை ஆதாரமாக வைத்துக் கொண்டு புவாட் மன்னர் பிரதம மந்திரி பதவியை ராஜிநாமா செய்யும்படி நஹாஸ் பாஷாவை வற்புறுத்தினார். ராஜிநாமா செய்ய நஹாஸ் பாஷா மறுத்து விட்டதால், மன்னர் அவரை மேற்படி பதவியிலிருந்து 'டிஸ்மிஸ்' செய்து விட்டார்.

நஹாஸ் பாஷா குற்றவாளி என்று நிரூபிக்க பிரிட்டிஷாரும் புவாட் மன்னரும் எவ்வளவோ முயற்சி செய்தும், அவர்கள் வெற்றி பெறவில்லை. கோர்ட்டாரின் தீர்ப்பு நஹாஸ் பாஷாவுக்கு முற்றிலும் சாதகமாக இருந்தது. எனவே, அதைப் பத்திரிகைகளில் பிரசுரிக்கக் கூடாது என்று புவாட் மன்னர் கோஷ்டியினர் தடுத்து விட்டார்கள்! இருந்தாலும் நஹாஸ் பாஷா குற்றவாளி அல்ல என்ற செய்தி எப்படியோ தேசம் முழுதும் பரவியது. அதைக் கேட்டு எகிப்து மக்கள் ஆனந்தம் அடைந்தார்கள். நஹாஸ் பாஷா மீது அவர்களுக்கு இருந்த அன்பும் மதிப்பும் பன்மடங்கு அதிகமாயின.

* * *

நாளுக்கு நாள் பொது ஜனங்களின் அபரிமிதமான ஆதரவைப் பெற்றுவரும் வப்துக் கட்சியை நசுக்கினாலன்றி, தங்கள் அபிப்பிராயப்படி எகிப்து சர்க்காரின் நிர்வாகம் நடக்காது என்பதைப் பிரிட்டிஷார் உணர்ந்து கொண்டார்கள். எனவே அந்தக் கட்சியை ஒழிப்பதற்கான பல நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன.

இவ்வாறாக, எகிப்து நாட்டை அரசியல் சூறாவளி அல்லல்படுத்திக் கொண்டிருக்கையில், இங்கிலாந்திலே தொழிற்கட்சி சர்க்கார் அதிகாரத்துக்கு வந்தனர். அந்தச் சம்பவம் எகிப்தியர்களுக்கு மிகுந்த நம்பிக்கையைக் கொடுத்தது. அதனால் எகிப்தில் அடித்து வந்த சூறாவளி அடங்கத் தொடங்கியது.

தொழிற்கட்சி சர்க்கார் அதிகாரத்துக்கு வந்ததும் முதல் காரியமாக எகிப்தில் பிரிட்டிஷ் கமிஷனராக இருந்த லார்டு லாயிடைத் திருப்பி அழைக்கத் தீர்மானித்தனர். லார்டு லாயிட் எகிப்தில் இருக்கும் வரையில் அந்த நாட்டில் கொந்தளிப்பு அடங்காது என்பதைப் பிரிட்டிஷ் சர்க்கார் கூடத் தெரிந்து கொண்டது ஆச்சரியம் அல்லவா?

# முகத்தாமரை

வி. எஸ். ஆர்.

சாமிநாதன் தன் மெய்மறந்த நிலையில் இருந்தான். ஆபீஸில் அவனுக்கு வேலையே ஓடவில்லை. ஏதோ வேலை செய்கிறவனைப் போல் பாவனை செய்தானே தவிர, அவன் கவனம் ஒரே ஒரு விஷயத்தில் லயித்து நின்றது. அவன் படுகிற அவஸ்தையைப் பார்த்துப் பக்கத்திலுள்ளவர்கள் கவனிக்காமல் இல்லை. அவர்கள் ஒருவருக்கொருவர் ரகசியமாகத் தங்களுக்குள் பேசிச் சிரித்துக் கொள்வதைச் சாமிநாதன் கொஞ்சங்கூட கவனிக்கவில்லை.

ஆபீஸில்தான் அவனுக்கு இந்தச் சங்கடம் என்றால் வீட்டிலாவது அவன் தன் வேலையைக் கவனிக்க முடிந்ததா? இவ்வாறு அவன் மெய்மறந்த பரவச நிலையில் இருந்ததற்குக் காரணம் வேறு யாரும் இல்லை. புதிதாகப் புக்ககம் வந்திருக்கும் அவன் மனைவி கமலத்தான். அவள் வீட்டுக்கு வந்ததிலிருந்து சுவாமிநாதன் மனம் ஒரு நிலையில் இல்லை. கிடைத்தற்கரிய ஒரு பெரும் பொக்கிஷத்தை அடைந்து விட்டால், அடைதற்கரிய பெரும் பாக்கியத்தை அடைந்து விட்டால், உள்ளம் குதூகலித்து நிலைகொள்ளாது தவிக்காமல் என்ன செய்யும்?

* * *

கமலம் புக்ககம் வந்து இரண்டு தினங்கள்தான் ஆகப்போகின்றன. 'டக்' 'டக்' என்ற அவள் மெட்டிச் சத்தம் அவன் இதயத்தைப் 'பட்' 'பட்'டென்று அடித்துக் கொள்ளச் செய்தது. அவள் அங்கு மிங்கும் வீட்டில் உலாவும்போது ஒரு கந்தர்வ மாது மேக மண்டலத்தில் ஊர்ந்து செல்வதுபோலிருந்தது. கமலம் போகும் போதும் வரும் போதும் அவனைக் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்தபோது சாமிநாதன் கந்தர்வ லோகத்திலிருந்து தேவலோகத்தை அடைந்தான். சாதாரணமாகத் தன் அறையில் உட்கார்ந்து தன் ஆபீஸ் அலுவல்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் அவன் இப்பொழுதெல்லாம் முன் பக்கத்து ஹாலில் உட்கார்ந்து கொண்டு ஏதோ படிப்பது போல் பாவனை செய்தான். ஆனால் அவன் கவனம் எப்பொழுதும் சமையல் அறையிலிருந்து கமலம் எப்பொழுது வருவாள் என்று பார்ப்பதிலேயே இருந்தது. கமலத்தின் கள்ளங்கபடற்ற குழந்தை முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலே அவனுக்குப் போதும். எப்பொழுது கமலம் தன் அருகில் வந்து பேசப் போகிறாள் என்று கூட அவன் ஏங்கவில்லை. அவள் எதிரில் வந்து நின்றாலே போதும். வீட்டில் பெரியவர்கள் என்று இருந்தால், இளம் தம்பதிகளுக்குத் தயக்கமும் சங்கடமும் ஏற்படுவது இயல்புதானே! வீட்டில் சாமிநாதனின் தாயார் தங்கம்மாள் இருந்தாள்.

தங்கம்மாளுக்கு வயது ஐம்பத்தைந்து. ஆனால் பம்பரம் போல் வேலை செய்வாள். அவளது ஊக்கமும் சாமர்த்தியமும் பிரசித்தமானவை. பல வருஷங்களுக்கு முன் கணவனை இழந்த அவள் உழைத்துத் தன் புதல்வன் சாமிநாதனையும் ஒரே புத்திரியான ஸ்ரீமதியையும் வளர்த்து வந்தாள். அவளது சிக்கனத்தினாலும் விவேகத்தினாலும் கையிலுள்ள பணத்தை வைத்துக் கொண்டு சாமிநாதனை எஸ். எஸ். எல். ஸி. வரையில் படிக்கவும் வைத்து விட்டாள். "என்ன சமர்த்து! என்ன சாமர்த்தியம்! ஸ்திரீ என்றால் தங்கம்மாள் மாதிரியல்லவா இருக்க வேண்டும்?" என்று எல்லோரும் ஊரில் சொல்வார்கள்.

கல்யாண வயது வந்ததும், ஸ்ரீமதிக்கு வரன் பார்க்கத் தொடங்கினாள். ஸ்ரீமதி நல்ல அழகி. பெரிய இடத்துப் பையன் ஒருவன் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முன் வந்தான். அதிகச் செலவின்றி அவள் கல்யாணம் ஆகி மதுரையிலுள்ள புக்ககம் போய்விட்டாள். "தங்கம்மாளின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!" என்று ஊரார் அதிசயித்தனர்.

தங்கம்மாள் அதிர்ஷ்டசாலிதான். சாமிநாதனுக்கு அறுபது ரூபாய் சம்பளத்தில் ஒரு கம்பெனியில் சுறுக்கெழுத்துக் குமாஸ்தா வேலை கிடைத்தது. இரண்டு வருஷங்களில் மளமளவென்று அவன் வேலை உயர்ந்து மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசியானான். அவனுடைய சம்பளமும் பன்மடங்கு உயர்ந்தது.

இந்தச் சமயத்தில்தான் பலர் சாமிநாதனுக்குப் பெண் கொடுக்க முன் வந்தனர். கோயமுத்தூரில் பிரபல வக்கீலான ராமநாத ஐயரின் கடைக்குட்டிப் பெண் கமலத்தின்

ஜாதகம் சாமிநாதனுக்கு ரொம்பவும் பொருத்தமிருந்தது. வேண்டிய சீர் செனத்திகளும் செய்வதாகச் சம்பந்தி ஒப்புக் கொண்டார். பெண் பார்க்கப் போன சாமிநாதன் கமலத்தை முதன் முதல் பார்த்ததுமே அவள் அழகைக் கண்டு பிரமித்தே போனான். அதற்குப் பிறகு கள்ளங்கபடற்ற கமலாவின் குழந்தை வதனம் இரவும் பகலும் தொந்தரவு செய்ய ஆரம்பித்தது. கல்யாணமும் நிச்சயமாகி ஒரு சுப தினத்தில் முகூர்த்தம் நடந்து முடிந்தது. கமலம் எப்பொழுது வீட்டுக்கு வரப்போகிறாள் என்று ஏங்கிப் பெருமூச்செறிந்தான் சாமிநாதன். சில மாதங்களுக்கெல்லாம் சுபதினத்தில் கமலமும் புக்ககம் வந்து சேர்ந்தாள். தங்கம்மாளின் பாக்கியத்தைக் கண்டு ஊரே வியந்தது.

❖

கமலமும் புக்ககம் வந்து சில வாரங்கள் ஆயின. மனைவி வந்ததும் தான் அடைந்த



இன்ப அதிர்ச்சியிலிருந்து சாமிநாதன் இன்னும் விடுபடவில்லை. இந்தச் சமயத்தில் தான் அக்குடும்பத்தின் அமைதியான வாழ்வில் சற்றே சலசலப்பு ஏற்பட்டது.

ஒரு நாள் காலை சாமிநாதன் குளிப்பதற்காக குழாயடிக்குச் சென்றான். அப்பொழுது சமையல் அறையிலிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

“கமலம்! ஒரு பெண்ணுக்கு அழகு, பணம், குணம் இருந்தால் மட்டும் போதாது. எல்லாவற்றையும் விடப் பொறுப்பும் வேண்டும். நீ பெரிய மனிதர்கள் வீட்டில் பிறந்து செல்வமாய் வளர்ந்த கடைக்குட்டிப் பெண் என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் புக்ககத்துப் பொறுப்பை நீ ஒப்புக் கொள்ள வேண்டாமா? உன் புருஷன் முழுச் சோம்பேறி. ஒவ்வொன்றுக்கும் பிறர் கையை எதிர்பார்ப்பவன். ஸ்பூனில் எடுத்து ஆகாரத்தை வாயில் ஊட்டுவது ஒன்றைத் தவிர மற்ற எல்லாக் காரியங்களையும் நானே செய்ய வேண்டியிருக்கிறது. நீ இனிமேல் இதுவரை இருந்தது மாதிரி குழந்தையாக இருக்கக் கூடாது” என்று பரிகாசம் செய்தாள் தங்கம்மாள்.

இதற்குக் கமலம் பதில் சொல்லவே யில்லை. அவளுக்குப் பதில் சொல்லத்தான் தைரியம் உண்டா? தைரியம் இருந்தாலும் பதில் சொல்லத்தான் தெரியுமா? இந்த சம்பாஷணை நடந்த பிறகு கமலம் சமையல் அறையில் இன்னும் அதிக நேரம் இருக்கத் தலைப்பட்டாள். சாமிநாதனுக்குத் தன் தாயார் பேரில் கோபம் வரத்தான் செய்தது. கமலத்தின் பேரில் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. கமலம் ‘முழுப் பொறுப்பையும்’ ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில் அவளைக் காண்பதே துர்லபமாகிவிடும் என்று தோன்றியது. இப்பொழுதெல்லாம் எப்பொழுதாவது ஒரு தடவைதான் கமலத்தின் முகதரிசனம் சாமிநாதனுக்குக் கிடைக்கும்.

அந்தச் சமயங்களில், தன் அருமை மனைவியின் முகத்தைப் பார்த்ததும் அவன் மனதில் இருந்த கோபதாபங்கள் எல்லாம் மாயமாய் மறைந்து போகும். அப்பொழுதெல்லாம், தன் தாயார் காதில் விழுந்தும் விழாதபடி “கமலம்! வரவே மாட்டேன் என்கிறாயே!” என்பான். அல்லது “கமலம்! இந்த வீட்டில் தான் இருக்கிறாயா?” என்று பரிகாசமாகக் கேட்பான். கமலத்தின் முகத்தாமரையைப் பார்த்த பிறகு கோபம் பறந்தோடிப் போகாமல் என்ன செய்யும்?

ஒரு நாள் மாலை சாமிநாதன் கொல்லைக் கிணற்றில் ஜலம் இழுத்துக் கொண்டிருக்

தான். பக்கத்தில் யாரோ வரும் சத்தம் கேட்டது. அவன் பக்கத்தில் வந்து நின்றது கமலம்தான். அவள் முகம் குங்குமம் போல் சிவந்திருந்தது.

"என்ன கமலம்!" என்றான் சாமிநாதன்.

"அம்மா கோபித்துக் கொள்கிறார். ராத்திரி சமையல் என்ன செய்வதென்று உங்களைக் கேட்டு அதற்கு வேண்டிய ஏற்பாட்டை நான் இன்னும் செய்யாமல் இருக்கிறேனாம்" என்றாள் கமலம். சிவந்த தன் முகத்தைச் சிணுங்கிக் கொண்டு அவள் கொஞ்சிய வண்ணம் புகார் செய்ததே ஒரு தனி அழகாயிருந்தது. சாமிநாதன் இதற்குப் பதில் சொல்லவில்லை. தன் மனைவியின் அழகையே பார்த்துக் கொண்டிருந்த அவனுக்கு எப்படி பதில் சொல்ல நினைவிருக்கும்? இதற்குப் பிறகு கமலம் ரகசியமாக, அடிக்கடி தன் கணவனிடம் வந்து தன் மாமியாரைப் பற்றிக் குழந்தை போல் புகார் சொன்னாள்.

தன் தாயாரின் பேரில் கோபம் ஒன்றும் வரவில்லை. கமலம் அடிக்கடி தன்னிடம் வந்து புகார் சொல்வதற்கும், அதைத் தொடர்ந்து சற்றுப் பேசுவதற்கும் ஒரு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்தாளே என்று சாமிநாதன் தன் மனதிற்குள் தன் தாயாருக்கு வந்தனம் செலுத்தினான்.

* * *

பல நாட்கள் சென்றன. கமலம் வீட்டு வேலைகளைக் கவனிக்கும் போது பாத்திரங்களையும் சாமான்களையும் 'தடால்' 'தடால்' என்று கீழே போட்டு விடுவாள். அந்த சமயங்களில் தங்கம்மாள், "ஒரு காரியம் செய்வதற்கு உனக்குத் தப்புக் கிடையாது. இப்படியா ஒரு பெண்ணை வளர்ப்பார்கள்!" என்று காரசாரமாகவே பேசுவாள். அப்படியெல்லாம் மாமியார் தன்னைக் கோபித்துக் கொண்ட போதிலும் கமலம் அதைப் பாராட்டுவதில்லை. அவளது முகம் மட்டும் எப்பொழுதும் அன்றலர்ந்த தாமரை போல் இருந்தது.

பக்கத்து வீட்டில் மஞ்சள் குங்குமம் வாங்கிக் கொள்ளக் கமலத்தைக் கூப்பிட்டிருந்தார்கள். கமலம் பக்கத்து வீட்டுக்குப் போனதும், அதுதான் சமயமென்று சாமிநாதன் தாயாரிடம் தன் மனதில் வெகு நாளாக உறுத்திக் கொண்டிருந்த விஷயத்தைச் சொல்லிவிட்டான். "அம்மா! நான் சொல்கிறேன் என்று நினைத்துக் கொள்ளாதே. கமலத்துக்கு ஒன்றுமே தெரியவில்லை. அவள் தவறு செய்தால் அதை எடுத்துக் காட்ட வேண்டியது உன் பொறுப்பு. ஆனால் ஸ்ரீமதி தவறு செய்தால் அவளை எப்படிக் கண்டிப்பாயோ அதே மாதிரி கமலத்தையும் கண்டிப்பதில் தவறு இல்லை!" என்று சாமிநாதன் சொல்லும் போதே தங்கம்மாள் முகம் மாறி விட்டது. ஆத்திரமும் திகைப்பும் அவள் முகத்தில் பிரதிபலித்தன. "நான் எப்பொழுதுமே கமலத்தை வேறு விதமாக நினைத்ததில்லையே! ஏன் இப்படிப் பேசுகிறாய்?" என்று துக்கத்தினால் தொண்டை அடைக்கக் கூறினாள் தாயார். இதற்குப் பிறகு அவன் பேசவில்லை.

மறுநாள் தங்கம்மாள் தன் பெண் வீட்டுக்குப் போய்ச் சில நாட்கள் தங்கிவிட்டு வரப் போவதாகச் சாமிநாதனிடம் சொன்னதும், அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அம்மா! நான் ஏதோ சொன்னேன் என்று நினைத்துக் கொண்டு கோபித்துக்





"வாசலில் நண்டுவாக்கிளி வந்திருக்கிறது, எஜமான்!"
"இப்பொழுது பார்க்க நேரம் இல்லையாம், அப்புறம் வரச் சொன்னாங்க என்று சொல்லு, போ!"

கொண்டு போகிறாயா?" என்று கேட்டான்.
"அதெல்லாம் ஒன்றுமில்லை. எனக்குக் குழந்தை ஸ்ரீமதியின் ஞாபகம் வந்து விட்டது. கொஞ்சநாள் அவளிடம்தான் தங்கி விட்டு வருகிறேனே!" என்றாள். சாமிநாதன் தடுக்கவில்லை.

* * *

தங்கம்மாள் புறப்பட்டுச் சென்ற மறு தினம் ஞாயிற்றுக் கிழமை.

இதுவரை தினமும் காலை ஆறு மணிக்குச் சாமிநாதனை அவன் தாயார் எழுப்பிவிடுவாள். அவனுக்குப் படுக்கையை விட்டு எழுந்திருப்பதென்றால் மனம் வருவதில்லை. தாயார் தினம் ஐந்தாறு தடவை கூப்பிட்ட பிறகு தான் அவன் எழுந்திருப்பது வழக்கம்.

இன்று தாயார் ஊருக்குப் போய்விட்டபடியால் அவன் இஷ்டப்பட்டபோது எழுந்திருக்கலாமல்லவா? மேலும் ஞாயிற்றுக் கிழமை; சுமார் ஏழரை மணி இருக்கும், "இந்தாருங்களேன்! உங்களைத் தானே!" என்ற கமலத்தின் குரல் அவனை எழுப்ப முயன்றது.

"உம்! உம், என்ன அவசரம்?" என்று தூக்கத்தில் உளறிக் கொண்டே தூங்க முயன்றான் சாமிநாதன்.

"எழுந்திருக்கப் போகிறீர்களா இல்லையா?" என்ற அதட்டலைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான் சாமிநாதன். கண்களைத் துடைத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். கமலத்தின் முகத்தில் இருந்த கண்டிப்பைக் கண்டு திகைத்தான்.

"மணி ஏழரை ஆகிறது. இன்னும் தூங்கினால் காப்பி சாப்பிட வேண்டாமா? நான் சமைக்க வேண்டாமா?" என்றாள் கமலம். அவள் குரலிலிருந்த உத்தரவைப் பார்த்துச் சாமிநாதன் திடுக்கிட்டான்.

சாமிநாதன் எழுந்து பல் தேய்த்து விட்டு வந்தான். கமலம் கொண்டு வந்து கொடுத்த காப்பியைச் சாப்பிட்டுவிட்டு வழக்கம்போல் அன்றைய தினப் பத்திரிகையைப் படிக்க உட்கார்ந்தான். தினமும் அவன் தாயார், "பத்திரிகை படித்தது போதும். ஆபீசுக்கு நாழிகை ஆகவில்லையா?" என்று கச்சரிப்பாள். தங்கம்மாள் பத்துத் தடவையாவது கச்சரித்த பிறகுதான் எழுந்திருப்பான்.

சுமார் பத்து மணி இருக்கும். சாமிநாதன் சிநேகிதர்கள் ஒவ்வொருவராக அவன் வீட்டுக்கு வந்துவிட்டார்கள். ஞாயிற்றுக்கிழமைகளில் சாமிநாதன் தன் சிநேகிதர்கள் வீட்டுக்குச் சீட்டாடப்போவது வழக்கம். இன்று தாயார் வீட்டில் இல்லாததால் அவர்களைத் தன் வீட்டுக்கு வரச்சொல்லி இருந்தான். பத்தரை மணிக்குச் சீட்டுக் கச்சேரி ஆரம்பமாயிற்று. சீட்டாடிக் கொண்டிருக்கும் போது, சமையற்கட்டிலிருந்து தன்னை அடிக்கடி கவனித்துக் கொண்டிருக்கும் மனைவியின் முகத்தைப் பார்த்து அவன் பயந்து விட்டான். கமலத்தின் முகத் தாமரை அவ்வளவு குளுமையாக இல்லை.

மணி பன்னிரண்டு அடித்தது. கமலம் தன் கணவனைச் சமிக்ஞை செய்து கூப்பிட்டாள். "வெய்யில் ஏறிப் போகிறது! எல்லாரையும் போகச் சொல்லிவிட்டு, குளித்து விட்டுச் சாப்பிடுங்கள்!" என்று கட்டளையிட்டாள். அவள் குரல் தன் ஆபீஸ் மானேஜர் குரல்போல் இருந்தது அவனுக்கு. சிநேகிதர்களை அனுப்பிவிட்டுக் குளித்துவிட்டுச் சாப்பிட உட்கார்ந்தான். அவனுக்குச் சோறே வேண்டியிருக்கவில்லை. அவன் மனம் பெரியதொரு விசாரணையில் இறங்கியது. "ஏன் சாப்பிடவேயில்லை!" என்று கேட்டாள் கமலம். "இப்படிச் சாப்பிடாமல் இருந்து உடம்பு இளைத்துப் போய்விட்டால் யார் உங்கள் தாயாருக்குப் பதில் சொல்கிறது? இதைச் சாப்பிட்டு விட்டுத் தான் போகவேண்டும்" என்று தேங்காய் அளவு சாதத்தை அவன் இலையில் போட்டாள் கமலம். சாமிநாதனுக்குச் சிரிப்பு வந்தது. சிரித்துக் கொண்டே அவள் முகத்தைப் பார்த்தான். அம்மா ஊருக்குப் போனதிலிருந்து கமலம் அடியோடு மாறி விட்டாள் என்று முடிவு கட்டினான்.

கமலம் சாப்பிட்டானதும் அவன் அருகில் வந்து அமர்ந்தாள். இளமையின் அழகுடன் பொலிந்த அவள் முகமண்டலம் ஒரே நாளில் பல வருஷங்கள் முதுமையடைந்து விட்டதைப் போல் தோன்றியது.

சாமிநாதன் எதைப் பார்த்துப் பரவசம் அடைந்தானே, அந்த முகத்தாமரை இவ்வளவு அழகிழந்து காணப்படுவானேன்?

"கமலம்! மூன்று மணிக்குப் போய்க் காப்பி போட்டால் போதும். அதுவரை ஓய்வெடுத்துக்கொள்! ஏன் இவ்வளவு பரபரப்பு?" என்றான் சாமிநாதன்.

"அழகாயிருக்கிறது! காப்பிக் கொட்டை வறுத்து அரைக்க வேண்டும். பால்காரன் ஒன்றரை மணிக்கு வந்து விடுவான். அகத்தில் மிளகாய்ப் பொடி இல்லை. அம்மா இருந்தால் எனக்குக் கவலையே இல்லை. இப்பொழுது நான்தானே எல்லாவற்றிற்கும் பொறுப்பாளி? நீங்கள் எல்லாவற்றிலும் தாமதம். காலா காலத்தில் சாப்பிட வைத்து உங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டியது என் பொறுப்பல்லவா?"

"அதனால்தான் காலையில் அப்படி என்னை அதட்டி எழுப்பினாயோ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சாமிநாதன்.

கமலம் சிரிக்கவில்லை. "ஆமாம். நாளைக்கு அம்மா வந்து எனக்குக் குடும்ப நிர்வாகம் செய்யத் தெரியவில்லை என்று கோபித்துக் கொள்ள மாட்டாளா?" என்றாள் கமலம். அவள் முகத்தில் கவலைதான் இருந்தது.

"என்ன அதிசயம்! ஸ்திரீகளின் முக அழகை, பொறுப்பு என்பது இவ்வளவு தூரம் மறைத்து விடுமா!" என்று அதிசயித்தான். "போதும் இந்தப் பொறுப்பு! வேண்டாம் இந்தப் பொறுப்பு!" என்று அவன் உள்ளம் எண்ணமிட்டது.

அம்மாளை உடனே வரவழைத்து விட வேண்டியதுதான். பழையபடியே தங்கம்மாள் பொறுப்பை ஏற்றுக்கொண்டு கமலத்துக்கு விடுதலை அளிக்கட்டும்! காரியம் செய்யத் தெரியவில்லை என்று தாயார் காட்டுப் பெண்ணை எவ்வளவு வேண்டுமானாலும் கோபித்துக் கொள்ளட்டும்! எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் கமலம் வேலை செய்யட்டும்! எப்படியாவது கமலத்தின் பொறுப்பு மட்டும் அகன்றால் சரிதான்!

"நீ இல்லாமல் இங்கே ஒன்றும் முடியாது. உடனே வரவும்" என்று தாயாருக்குத் தந்தி அடித்தான் சாமிநாதன். மறு நாள் மலர்ந்த முகத்துடன் தங்கம்மாள் வண்டியிலிருந்து இறங்கினாள். "இனி விட்டது கவலை!" என்று பெருமூச்செறிந்து முகமலர்ந்தாள் கமலம். மேகத்துக்குள்ளிருந்து வெளி வந்த சந்திரனைப் போல் அவள் முகம் மலர்ந்ததைக் கண்டு சாமிநாதன் அடைந்த குதூகலத்தை அளவிட முடியுமா?




முருகனுக்குச் சிறு வயதிலிருந்தே ஆடுகளைக் கண்டால் ரொம்பப் பிரியம். அவைகளோடு ஓடி விளையாடுவது என்று ஆரம்பித்து விட்டால் அவனுக்கு, வீடு, வாசல், பசி, தாகம் முதலிய எதைப் பற்றிய ஞாபகமும் வராது.

முருகனுக்குக் கொஞ்சம் விவரம் தெரியும் வயது வந்ததுமே அவன் ஆடு மேய்க்கும் தொழிலில் உற்சாகத்தோடு ஈடுபட்டான்.

தினந்தோறும் சூரிய உதயத்துக்கு முன்பே முருகன் எழுந்துவிடுவான். ஆட்டு மந்தையை ஓட்டிக்கொண்டு ஊரைவிட்டு வெகு தூரம் சென்று மேய்த்துக் கொண்டு வெய்யில் தாழ்ந்த பிறகு வீட்டுக்கு வந்து சேருவான்.

★

அன்றைக்கு முருகன் தினந்தோறும் போகும் வழியாகப் போகவில்லை. வேறு பக்கமாகத் திரும்பி ஆட்டு மந்தையை ஓட்டிக்கொண்டு போனான்.

வெகு தூரம் போனதும், கம்பு செழிப்பாக அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

கம்புப் பயிரின் செழிப்பைக் கண்டு அவன் அதிசயித்துத் தன்னை மறந்து நின்ற ஒரு சில விநாடிகளுக்குள் ஒரு விபரீதம் நிகழ்ந்து விட்டது. மந்தையிலிருந்த அத்தனை ஆடுகளும் 'திமு திமு' வென்று ஒன்றின் பின் ஒன்றாகக் கம்புக் கொல்லைக்குள் புகுந்து வயிறாரத் தின்னத் தொடங்கின.

முருகன் தன் சுய உணர்வுக்கு வந்த போது ஒரு ஆடுகூடக் காணப்படவில்லை. முருகன் சுற்று முற்றும் பார்த்தான். கம்புக் கொல்லைக்குள் புகுந்து மனம்போனபடி தின்று கொண்டிருக்கும் ஆடுகளைப் பார்த்ததும் அவனுக்கு 'பகீர்' என்றது. 'உஸ், உஸ்!' 'டுப், டுப்!' என்றெல்லாம் என்னென்ன விதமாகவோ கத்திப் பார்த்தான். ஆடுகள் கொஞ்சமும் அசைந்து கொடுக்கவில்லை. பிறகு அவனும் சிரமப்பட்டு, வேலியில் இருந்த சின்ன வழியாக உடம்பை ஒடுக்கிக் கொண்டு உள்ளே நுழைந்து கையில் கழியுடன் ஆடுகளைத் துரத்தியடித்து விரட்டினான்.

கம்பின் ருசியை அறிந்த ஆடுகள் அவ்வளவு சுலபமாக முருகனிடம் பயப்பட்டு அகப்பட்டுக் கொள்ளவில்லை. ஆளுக்கு ஒன்றாகச் சிதறி ஓடி மேலும் மேலும் கம்புப் பயிரை அழிக்கத் தொடங்கின.

முருகன் அலுத்துப் போய் விட்டான். அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. கம்புக் கொல்லையை விட்டு வெளியே வந்து கண்ணீர் ஆறாய்ப் பெருக அழ ஆரம்பித்து விட்டான். கம்புக் கொல்லையின் சொந்தக்காரன் வந்து பார்த்தால் என்ன நடக்குமென்று முருகனுக்கு நன்றாகத் தெரியும். அத்துடன் இந்த விஷயம் முருகனுடைய எஜமானனுக்குத் தெரிந்து விட்டால் வேறு வினையே வேண்டாம்.

அந்த வழியாக ஒரு முயல் வந்தது. அழுது கொண்டு உட்கார்ந்திருக்கும் முருகனைப் பார்த்ததும் அதன் மனசில் ரொம்பவும் இரக்கம் உண்டாயிற்று.

"தம்பி, ஏன் அழுகிறாய்?" என்று முயல் முருகனைப் பார்த்துக் கேட்டது.

"என் எஜமானுடைய ஆடுகளை மேய்ச்சலுக்கு அழைத்து வந்தேன். அவைகளெல்லாம் இந்தக் கம்புக் கொல்லைக்குள் புகுந்து அழிக்கத் தொடங்கிவிட்டன. என்ன ஓட்டினாலும் முடியவில்லை. நான் என்ன செய்வேன்.........?" என்று சொல்லிவிட்டு முருகன் 'ஓ'வென்று தேம்பித் தேம்பி அழுதான்.



முயல், "பூ, இவ்வளவுதானா? நான் அவைகளையெல்லாம் வெளியே ஓட்டி விடுகிறேன். நீ கவலைப் படாதே! அழாதே!" என்று கூறிவிட்டு, கம்புக் கொல்லைக்குள் புகுந்தது. ஓடி ஓடி அவற்றையெல்லாம் துரத்தியது. ஆடுகளெல்லாம் இங்கும் அங்கும் ஓடிக் கம்புப் பயிரை மிதித்துத் துவைத்து அழித்தன. ஆனால் வெளியே வரவில்லை. முயலும் கடைசியில் சோர்ந்து போய் வெளியே வந்து அழத் தொடங்கியது.

அப்பொழுது அந்த வழியாக ஒரு நரி வந்தது. "முயலே, முயலே! நீ ஏன் அழுகிறாய்?" என்று கேட்டது நரி.

"முருகனுடைய ஆடுகள் கம்புக் கொல்லைக்குள் புகுந்து விட்டன. அவைகளை அவனால் விரட்ட முடியவில்லை. ஆகவே அந்த ஆடுகளை எப்படியாவது வெளியே விரட்ட வேண்டும் என்று அவன் கேட்டுக் கொண்டான். எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும் முடியவில்லை அது தான் எனக்கும் அழுகை வந்து விட்டது!" என்று கூறியது முயல்.

"இவ்வளவுதானே! ஒரு நொடியில் நான் அவைகளை விரட்டிவிடுகிறேன்!" என்று கூறிவிட்டு நரி கம்புக் கொல்லைக்குள் புகுந்து ஆட்டு மந்தையை விரட்டத் தொடங்கியது. ஒரு ஆடு கூட நகரவில்லை. நரி அவைகளைத் துரத்தியதுதான் மிச்சம்.

நரியும் அலுத்துப் போய் முயலுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து அழ ஆரம்பித்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு தேனீ 'விர்' ரென்று அந்த வழியாகப் பறந்து வந்தது.

நரி அழுவதைப் பார்த்த தேனீ ஆச்சரியத்தோடு அதன் அருகில் வந்து, "நமஸ்காரம், நரியாரே! ஏன் அழுகிறீர்கள்! தங்களுக்கு என்ன சங்கடம் நேர்ந்து விட்டது?" என்று கேட்டது.

அதற்கு நரி, "தேனீயே! இதைக் கேள். முயல் அழுகிறதே என்று, நான் அழுகிறேன். முயல் ஏன் அழுகிறது என்றால் முருகன் அழுகிறான். முருகன் ஏன் அழுகிறான் என்றால் அவனுடைய ஆட்டு மந்தை கம்புக் கொல்லைக்குள் புகுந்து அழிக்கின்றன! அவனும் அவைகளை ஓட்ட முடியவில்லை. எங்களாலும் முடியவில்லை! என்ன செய்வது?" என்றது.

"இவ்வளவுதானே! நான் அவைகளை விரட்டி விடுகிறேன்!" என்றது தேனீ.

"முருகனாலும் நரியாலும் முடியாத காரியத்தை உன்னால் எப்படி செய்ய முடியும்?" என்று கேட்டு முயல் சிரித்தது.

தேனீ பதில் பேசாமல் கம்புக் கொல்லைக்குள் புகுந்தது. பிறகு 'விர்ர்' என்று ஒரு ஆட்டின் காதுக்கு அருகில் சத்தம் போட்டு வட்டமிட்டது. ஆடு ஆனமட்டும் தலையை ஆட்டிப் பார்த்தது. தேனீ விடுகிற வழியாயில்லை. இந்தக் காது மாற்றி அந்தக் காதில் விடாமல் சத்தம் போட்டு வட்டமிட்டது.

அவ்வளவுதான். அந்த ஆடு பயந்து நடுங்கிவிட்டது. 'இந்தக் கொல்லையில் ஏதோ விபரீதம் இருக்கிறது!' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு வேகமாக ஓடி, வேலிச் சந்தில் புகுந்து வெளியே வந்தது. உடனே மற்ற ஆடுகளும் அதைப் பின்பற்றி ஒன்றன் பின் ஒன்றாக வெளியே வந்துவிட்டன.

முருகனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஆட்டு மந்தையை ஓட்டிக் கொண்டு உற்சாகமாக வீட்டுக்குப் போனான்.



# சபாஷ் சீனு!

-சாமா-

பாப்பா மலர்





சீனு ஒரு கறுப்பு நாய் வளர்த்து வந்தான். அதை அவன் எங்கு சென்றாலும் அழைத்துப் போவது வழக்கம். அவன் தகப்பனார் ஒரு சின்ன சைக்கிள் வாங்கிக் கொடுத்திருந்தார். சீனு தன் சைக்கிளில் ஏறி நாயைப் பிடித்துக் கொண்டு கிளம்பினான்.



சீனு தங்கவேலு முதலியார் நகைக் கடை வழியாக வந்தான். முதலியார் சீனுவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து "ரொம்ப அவசரமாக இது போகணும். தயவு செய்து தபாலாபீஸில் போட்டு விடுகிறாயா?" என்றார். தபாலை வாங்கிக் கொண்டு சைக்கிளை விடத் தொடங்கினான். நாயும் கூடவே வந்தது. நாயின் கயிற்றைச் சைகிளில் கட்டி விட்டான். சைக்கிளை நாயே இழுத்துக் கொண்டு ஓடிற்று. சீனு ஜம்மென்று காலைத் தூக்கிக் கொண்டு சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருந்தான். நாயின் கண்ணில் ஒரு கறுப்புப் பூனை பட்டுவிட்டது. உடனே நாலுகால் பாய்ச்சலில் இங்கு மங்குமாகப் பூனையைத் துரத்தியது. சீனு திக்கு முக்காடி விட்டான். எந்தச் சமயத்தில் தான் மோதிக்கொள்ளப் போகிறோமோ என்று பயந்தான்.



இதற்கு நடுவில் முதலியாரின் நகைக் கடையில் திருடன் புகுந்து பல நகைகளையும் எடுத்துக் கொண்டு எல்லோருக்கும் கத்தியைக் காண்பித்துப் பயமுறுத்திக் கடையை விட்டு ஓட எத்தனித்தான். வாசற்படியில் வந்ததுதான் தாமதம். பூனையைத் துரத்திக் கொண்டு பறந்த நாய் அப்படியே கடைக்குள் தாவிற்று. திருடன் மேல் சைக்கிள், சீனு, நாய் எல்லாமாகச் சேர்ந்து விழுந்தார்கள். திருடன் உருண்டு கீழே விழுந்தான். அவனுக்குப் பலத்த காயம் ஏற்பட்டது. எல்லோரும் திருடனை ஓடி வந்து பிடித்து ஜெயிலுக்குக் கொண்டு போனார்கள். சீனுவுக்குச் சிறிதுதான் காயம் ஏற்பட்டது. அவனையும், நாயையும் பாராட்டினார்கள். சன்மானங்களும் தந்தார்கள். நாய் எதையும் பாராட்டாமல், தான் துரத்திய பூனையையே மோப்பம் பிடித்து ஓடிக் கொண்டிருந்தது.






பிரிட்டானியா
போன்ற பிஸ்கோத்தே
கிடையாது!




மொழிபெயர்ப்பு: 'வாஞ்சி'

(சென்ற வாரத் தொடர்ச்சி)

கோபி அவ்வாறு கூறியதைக் கேட்ட கானுவும் சளைக்கவில்லை.

"எனக்காகக் கஷ்டப் பட்டார்களாமே! நீயும், அந்த அயோக்கிய மாஜிஸ்திரேட்டும் எனக்காகக் கஷ்டப்பட்டீர்கள் அல்லவா! அப்பா படுத்த படுக்கையாகக் கிடந்தார். நான் வேலைக்காகத் தெருத் தெருவாய் அலைந்து கொண்டிருந்தேன். நீ பணத்தில் புரண்டு கொண்டிருந்தாய். எனவே என்னைக் கல்யாணச் சந்தையில் அடிமையாக விற்பதைக் காட்டிலும் அபூர்வ சந்தர்ப்பம் உனக்குக் கிடைக்குமா! நீ நம் குடும்பம் முழுவதையும் போஷித்துக் காப்பாற்றுவாய் என்று அப்பா எண்ணிக்கொண்டிருந்தார். அவருக்கு உன் மீது அவ்வளவு நம்பிக்கை! ஆனால் நீயோ ஒரு மாஜிஸ்திரேட்டை மாமனாராக என் தலையில் கட்டிவிட்டாய். நான் பண வசதியுடன் இருந்தால் குடும்ப பாரத்தை என் தலையில் சுமத்தி விடலாம் என்று நினைத்தாய். ஆனால் உன் தந்திரம் பலிக்கவில்லை; நீ எண்ணிய விதம் நடக்கவில்லை."

"உன் விஷயத்தில் நான் நினைக்கிறபடி ஒன்றும் நடக்காதுதான்!" என்று வெறுப்புடன் கூறினான் கோபி.

"உன் அருமை மாஜிஸ்திரேட்டான என் மாமனாரைப் பற்றி உனக்கு நான் சொல்லவில்லை அல்லவா! நீ ஒரு வக்ரபுத்தி படைத்த வக்கீல்; அவர் ஒரு வக்ரபுத்தி படைத்த மாஜிஸ்திரேட். இருவருக்கும் எவ்வளவு பொருத்தம் பார்! என் அருமை மனைவியின் அப்பா இருக்கிறாரே, அவர் உன்னைக் காட்டிலும் பெரிய ஆள். சென்ற மூன்று வருஷ காலமாக நான் எப்படிக் காலம் தள்ளினேன், உனக்குத் தெரியுமா! மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்கு எதிரில் ஒரு பல சரக்குக் கடையை ஆரம்பித்தேன். நான் யார் என்பதையும் மாஜிஸ்திரேட் எனக்கு என்ன உறவு என்பதையும் ஒரு பலகையில் எழுதிக் கடைக்கு மேலே மாட்டினேன். உன் மாஜிஸ்திரேட்டைக் கண்டு எல்லோரும் சிரிக்கட்டும் என்பதற்காகத்தான் அப்படிச் செய்தேன். இவ்விதம் செய்து அவரிடமிருந்து என் செலவுக்கு வேண்டிய பணத்தைக் கறந்தேன். இப்போது உன்னிடமிருந்தும் அப்படித்தான் கறக்கப் போகிறேன்."

"இந்தப் பயலுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. பைத்தியம்தான், சந்தேகமில்லை" என்றான் கோபி.

ஸரோஜும் கோபியுடன் ஒத்துப் பாடினாள்: "பைத்தியம் இராமல் வேறு என்ன! அவனால் நமக்கு எவ்வளவு கஷ்டம்! எவ்வளவு அவமானம்! இதெல்லாம் போதாது என்று நம்மிடமிருந்து பணமும் வேண்டுமாமே!"

கானு எரிமலை போல் சீறிக் கொண்டு ஸரோஜ்மீது பாய்ந்தான்.

"ஏ பெண்ணே! இங்கே பார்! மேற்கொண்டு நீ ஒரு வார்த்தை சொன்னாயோ, உன்னை இதோ உன் கணவனுக்கு எதிரிலேயே நொறுக்கித் தள்ளிவிடுவேன். அதற்குமேல் நான் இருந்தாலும் செத்தாலும் எனக்குக் கவலையில்லை."

கானு இவ்விதம் சொல்லிக் கொண்டு, ஸரோஜின் கழுத்தை நெரித்துவிடுபவன் போல் கைகளை வைத்துக் கொண்டு, கண்கள் சிவக்க அவள் அருகில் சென்றான்.

"இன்றிருந்து இந்த வீட்டில் உனக்கு எவ்வித அதிகாரமும் இல்லை. நீ இனிமேல் இந்த வீட்டில் என் தாயார், சகோதரி, சகோதரர்களுக்கு வேலைக்காரியே ஒழிய வேறு ஒன்றுமில்லை. மேற்கொண்டு நீ ஒரு வார்த்தை சொன்னாலும் உன் கதி அதோகதிதான்" என்றான் கானு.

கோப வெறி கொண்ட கானு கூறியதைக் கேட்ட ஸரோஜ் நடுநடுங்கி ஒடுங்கிவிட்டாள்.

"அப்பா கோபி, தயவு செய். அப்பா கானு தயவு செய். இந்தக் குடும்பத்தின் கௌரவத்தைக் குட்டிச் சுவராக்கி விடாதீர்கள்" என்று அவர்களுடைய தாயார் வேதனையினால் கையைப் பிசைந்து கொண்டாள்.

"வெளியே போ! நீயும் உன் மனைவியும் இந்த வீட்டை விட்டு வெளியே போய் விடுங்கள்; இந்த நிமிஷமே போய் விடுங்கள்" என்று கத்திக் கொண்டே கோபி காணுவை நெருங்கினான்.

"இதையும் கேட்டுவிடு! உன் மாஜிஸ்திரேட் பெரிய கருமி என்று சொன்னேன் அல்லவா! அருமை அண்ணா! உன்னைக் காட்டிலும் அவர் பெரிய கருமி. அப்படி யிருந்தும் அவரை நான் எனக்குத் தேவையான பணத்தைக் கக்கும்படி செய்தேன்; இன்னும் செய்து வருகிறேன். அவர் வீட்டில் நாயை நாய்போல் நளினியைச் சுற்றிக் கொண்டு கிடப்பேன் என்று அவர் நினைத்தார். அவர் கட்டளைப் படி நான் தூங்க வேண்டும், சாப்பிட வேண்டும், நளினியுடன் சல்லாபம் செய்ய வேண்டும் என்று அவர் எண்ணினார். நீ என்னைப் பற்றி என்ன நினைத்தாய்! உன்னுடைய மூட்டைகளைத் தூக்கும் கழுதை என்று நினைத்தாய். அதோ இருக்கிறானே ஸரோஜ், — அவனுடைய வாழ்க்கையிலேயே முதல் தடவையாக வாயைப் பொத்திக்கொண்டு,—அந்த அம்மாளும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தாள்."

"ஏய், வெளியே போ என்று சொன்னேனே, இல்லையா!" என்று கர்ஜித்தான் கோபி.

"நீ வெளியே போ" என்று கத்தினான் காணு.

"தயவு செய்யுங்கள், தயவு செய்யுங்கள்; கோடி புண்யம் உண்டு" என்று அங்கலாய்த்தாள் அவர்களுடைய தாயார்.

"வக்கீல் ஐயா, நான் ஏமாந்தவன் என்று நினைக்காதே. உன் படிப்புக்காகவும் நீ வக்கீல் தொழிலை ஆரம்பிக்கவும் அப்பா சொத்திலிருந்து எவ்வளவு எடுத்துக் கொண்டாய்! சொல்லு. ஏதோ கடன் இருக்கிறது என்று சொல்லி, இந்தச் சொத்தை உன் மைத்துனனிடம் அடமானம் வைத்தாய் அல்லவா! நீ, உன் மனைவி, மைத்துனன் மூவரும் சேர்ந்து எவ்வளவு மோசடி செய்திருக்கிறீர்கள்!" என்று கேட்டான் காணு.

"வெளியே போடா."

"நீ வெளியே போ."

# முதல் விரோதி

அன்றைக்கொருநாள் என் நண்பர் ஒருவர் "ஸார்,.......ஸினிமாப் படம் ரொம்பப் பிரமாதம். தவறாமல் போய்ப் பாருங்கள்" என்றார். போய்ப் பார்த்தேன். 'கொட்டு' 'கொட்டு' என்று மூன்று மணி நேரம் உட்கார்ந்து பார்த்துவிட்டு, இந்தப் படத்தில் எதைக் கண்டு பிரமாதம் என்று என் நண்பன் சொன்னான்! நம் கைக் காசையும் செலவழிக்கச் செய்தான் என்ற பிரச்னையைத் தீவிரமாக ஆராய்ந்துகொண்டே வெளியே வந்து சேர்ந்தேன்.

அதேபோல் சமீபத்தில் இன்னொரு நண்பர் ஒரு கதைப் புத்தகம் என் கையில் கொடுத்து "ரொம்ப ஆச்சரியமான புஸ்தகம். நீங்கள் கட்டாயம் படிக்க வேண்டும்" என்று சொன்னார். ஒருநாள் இரவு எல்லாம், எலக்ட்ரிக் கரண்ட் வீணாகப் படித்து முடித்துவிட்டு, இந்தப் புஸ்தகத்தை எழுதிய ஆசிரியரிடம் தீராப் பகை கொண்டேன்.

"ஸார், மனுஷ ஜன்மம் எடுத்து என்ன பிரயோஜனம்......ஹோட்டலில் ஒரு 'கப்' காப்பி சாப்பிடவில்லை என்றால்! காப்பி என்றால் அதுவல்லவா காப்பி! 'கம்' என்று என்ன வாசனை! என்ன வாசனை!" என்று வாயாரப் புகழ்ந்தார்..

ஒரு நாள் நானும் அவர் சொன்ன ஹோட்டலில் காப்பி குடிக்கப் போனேன். காப்பி அன்றைக்குப் பார்க்கக் கழுநீராக இருந்தது.

இப்படிப் பிரமாதம், ஆச்சரியம், அற்புதம், ஒண்ணாம் க்ளாஸ், ஏ ஒன் என்றெல்லாம் அடைமொழிகள் கொடுக்கப்படும் விஷயங்கள் எல்லாம் உப்பு சப்பின்றிக் காணப்படுகின்றன.

ஆனால், ஒவ்வொரு சமயம் இப்படியும் நேர்ந்து விடுவது உண்டு. என்ன செய்வது என்று தோன்றாமல் மவுண்ட்ரோடில் போய்க்கொண்டிருக்கும் நாட்களில், ஸினிமாத் தியேட்டர் வாசலை அடைந்தவுடன், 'இங்கே நுழைந்து சற்று நேரம் உட்கார்ந்து விட்டுப் போவோமே' என்று நுழைவோம். என்ன படம், யார் எடுத்த படம், நடிகர்கள் யார் என்றெல்லாம் பார்த்துக் கொள்ளாமல் தியேட்டருக்குள் நுழைந்து வைப்போம். அப்படிப் பார்த்த படங்கள் பெரும்பாலும் நன்றாகவே இருந்திருக்கின்றன.

அதிகமாக யோசிக்காமல், இரண்டணா நாலணா கொடுத்துப் பழம் புஸ்தகக் கடைகளில் வாங்கிய பல புஸ்தகங்கள் சுவாரஸ்யமாக இருந்திருக்கின்றன.

இதையெல்லாம் பார்க்கும்போது, அபாரமாகப் புகழப்பட்ட விஷயங்கள் ஏன் சுவாரஸ்யமற்று இருக்கின்றன. புகழப்படாத சாதாரண விஷயங்கள் ஏன் சுவாரஸ்யமாக இருக்கின்றன என்ற எண்ணம் மனதில் எழுகிறது. அத்துடன் கூடவே, "பெயர்ச் சொல்லின் முதல் விரோதி அதற்குக் கொடுக்கப்படும் அடைமொழிதான்" என்று யாரோ சொன்னது உண்மைதானோ என்றும் தோன்றுகிறது. வெ.ந

அவ்வளவுதான்! கோபிக்கு ஆத்திரத்தில் என்ன செய்கிறோம் என்றே தெரியவில்லை. ராஜு மீது ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவன் கழுத்தைப் பற்றினான். அதைப் பார்த்ததும் அவர்களுடைய தாயார், பெண், ஸரோஜ், ரவி, சங்கர், ராமேஷ் எல்லோரும் பீதியினால் கூக்குரலிட்டுக் கத்தினார்கள்.

* * *

இச் சந்தர்ப்பத்தில், "கு—கு—கு—குழந்தைகளா! நீ—நீங்கள் என்னைக் கூ—கூ—கூப்பிட்டீர்களா!" என்று அருகில் மனதை உருக்கும் ஒரு நினைக்குரல் கேட்டது.

பல வருஷங்களாக வீட்டை விட்டே வெளியில் வராத கண்ணில்லாத வேலைக்காரக் கிழவி கையில் தடியைப் பிடித்துத் தட்டுத் தடுமாறிக் கொண்டு மெதுவாக உள்ளே வந்து கொண்டிருந்தாள். அவளுடைய தடிக் கம்பு யுத்த சன்னத்தமாக நின்று கொண்டிருந்த கோபி, ராஜு இருவர் மீதும் பட்டது. கடைசியில் அந்தக் கிழவி மெதுவாக இருவருக்கும் நடுவில் வந்து நின்றாள்.

"இந்தக் காலத்துக் குழந்தைகளுக்கு அன்பு, இரக்கம் ஒன்றுமே கிடையாது. இந்த வீட்டில் உள்ள சகலரும் குழந்தையாக இருந்த போது, அவர்களையெல்லாம் நான் அன்புடன் மடிமீது வைத்துக் கொண்டு தாலாட்டியிருக்கிறேன். ஆனால் இப்போது அவர்களில் ஒருவருமே என்னைப் பிடித்துக் கொண்டு வழி காட்டுவதில்லை" என்றாள் கிழவி.

அந்தக் கிழவி அவ்விதம் கூறியதும் எல்லோரும் வெட்கித் தலை குனிந்தனர். சில விநாடிகளுக்கு முன் போர் முழக்கத்தினால் அதிர்ந்த அந்த வீட்டில் அப்போது நிசப்தம் நிலவியது. யாரும் வாய் திறக்கத் துணியாமல் மௌனமாக இருந்தனர்.

"கோபி எங்கே! ராஜு எங்கே! இந்த வீட்டுப் பெண்கள் எல்லோரும் எங்கே! ஏன் ஒருவரும் பேசவில்லை. விருந்து நடக்கும் தினத்தில் உங்கள் வீட்டைத் தேடி வந்திருக்கும் கிழவிக்கு நீங்கள் ஒன்றும் கொடுக்கப் போவதில்லையா!" என்று கிழவி தடிக் கம்பால் தரையைத் தடவிக்கொண்டே கேட்டாள்.

"இதோ இருக்கிறேன், பாட்டி! உட்காருங்கள்" என்று சாந்தமாகச் சொல்லிக் கொண்டே கோபி அவளுடைய ஒரு கையைப் பிடித்துக் கொண்டான்.

"நான் ராஜு, பாட்டி!" என்று சொல்லிக் கொண்டு ராஜு அவளுடைய மற்றொரு கையைப் பிடித்துக் கொண்டான்.

இருவரும் தலையணைக்கு அருகில் அவளை உட்கார வைத்தனர்.

சசி சமையல் அறைக்கு ஓடிப் போய்ச் சில தின்பண்டங்களை எடுத்துக் கொண்டு உற்சாகத்துடன் வந்தாள். "பாட்டி, இதோ ஜிலேபியும் அல்வாவும் பால் பாயசமும் கொண்டு வந்திருக்கிறேன், சாப்பிடு!" என்றாள். பாட்டி அவற்றைத் தின்று கொண்டே பேசத் தொடங்கினாள்.

"உங்களிடையே இருக்கும்போது எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது! பணம், புகழ் எல்லாம் வருகிறபோது வரும், போகிறபோது போயே விடும். ஆனால் தன்னாத காலத்தில் சொந்தக்காரர்கள்தான் நம்மைக் கைவிட மாட்டார்கள். எனக்கு இந்த வீட்டில் என்ன பாத்தியம் இருக்கிறது! நான் இங்கு ஒரு காலத்தில் வேலைக்காரியாக இருந்தவள், அவ்வளவுதான்! ஆனால் பல பல வருஷங்கள் நான் இந்த வீட்டில் இருந்திருக்கிறேன். ஒரு காலத்தில் உங்கள் குடும்பம் வறுமை தாங்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தது. பிறகு செல்வம் வந்தது. மறுபடியும் செல்வம் மறைந்து வறுமையும் கஷ்டமும் வந்தன. கடவுள் கிருபையால் இப்போது மீண்டும் செல்வம் கொழித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் பெயரும் புகழும் பெற்றிருக்கிறீர்கள். நான் என்ன கிழட்டு வேலைக்காரிதானே!" என்றாள் அந்தக் கிழவி.

அவள் கூறியதைக் கேட்டதும், ரவியைத் தவிர மற்ற யாவரும் ஒரே வாக்காக "இல்லை, இல்லை, இல்லை" என்றார்கள். அந்தப் பாட்டியைப் பற்றி ரவிக்கு எதுவும் தெரியாது அல்லவா! "நீ வேலைக்காரக் கிழவி அல்ல. நீ எங்களுடைய சொந்தப் பாட்டி" என்று உற்சாகத்துடன் சொன்னார்கள்.

"அடடா! உங்கள் அன்பை நான் என்னவென்று சொல்லுவது! ஒரு ஏழைக் கிழவியிடம் இந்த வீட்டில் உள்ளவர்களைத் தவிர வேறு யாரும் இவ்வளவு அன்பு காட்ட மாட்டார்கள். காலம் ரொம்பவும் கெட்டு விட்டது என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். வீட்டில் உள்ள பெண்கள் நல்லவர்களாக இருக்கும் வரையில் காலம் எவ்விதம் மோசமாக இருக்க முடியும்! உயிரைச் சிருஷ்டிப்பது பெண்க



னான நாம்தான்; போஷித்துச் சக்தியைக் கொடுப்பதும் பெண்கள்தான். குடும்பங்கள் சந்தோஷமாக இருப்பதும் பெண்களையே பொறுத்திருக்கிறது.

"கடவுள் கிருபையால் இந்தக் குடும்பம் நல்ல பெண்களை அடையும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறது. எந்தப் பெண்கள் குழந்தைகளிடத்திலும் கணவரிடத்திலும், மூத்தோரிடத்திலும் தங்கள் கடமை தவறாமல் நடந்து கொள்கிறார்களோ, அவர்கள்தான் உலகத்தையே ஆட்சி புரிகிறார்கள் என்று சொல்ல வேண்டும். கோபி! உன்னுடைய தாத்தாவுக்கு ஒரு சமயம் கடன் வந்துவிட்டது. அவர் ஜெயிலுக்குப் போகும் தறுவாயில் இருந்தார். அப்போது உன் தகப்பனாரைப் பெற்ற பாட்டி என்ன செய்தாள் தெரியுமா! தான் போட்டுக்கொண்டிருந்த சகல நகைகளையும் கழற்றிக் கொடுத்து, கடனை அடைக்க ஏற்பாடு செய்தாள். அதனால் உன் தாத்தா ஜெயிலுக்குப் போகாமல் தப்பினார். உன் குடும்பம் அவமானமும் அழிவும் ஏற்படாமல் தப்பியது. அதிலிருந்து அவர் உன் பாட்டியைப் பெண் தெய்வமாகக் கருதினார். பிறகு அவர் ஏராளமாகப் பணம் சம்பாதித்துப் பெரும் சீமானாக விளங்கினார். உன் பாட்டி நகைகளுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு கணவனைக் காட்டிக் கொடுத்திருந்தால், உங்கள் குடும்பம் எக் கதிக்கு உள்ளாகியிருக்கும்!"

கிழவி கூறிய வரலாற்றைக் கேட்ட எல்லோர் கண்களிலும் நீர் ததும்பியது. நாணு உணர்ச்சி வசப்பட்டு மரம்போல் நின்றான்.

அவனது நிலையைக் கண்ட நளினி கிழவியின் அருகில் வந்து, "பாட்டி! கால்கள் கடுக்க இவ்வளவு தூரம் வந்தீர்களே. நான் கால்களைப் பிடித்து விடட்டுமா!" என்று சொல்லிக் கிழவியின் கால்களை மெதுவாக வருடத் தொடங்கினாள்.

அப்போதுதான் நாணுவின் முகத்தில் கொஞ்சம் புன்முறுவல் தோன்றியது. நாணுவின் முகத்தில் அத்தகைய புன் சிரிப்பை நளினி அதற்கு முன் பார்த்ததே இல்லை!

"எங்கள் பாட்டி என்று சொன்னீர்களே, அவள் தன்னுடைய வாழ்க்கையில் தவறே செய்ததில்லையா!" என்று கேட்டாள் நளினி.

"குழந்தாய்! நாம் எல்லோரும்தான் சிற்சில சமயங்களில் தவறு செய்து விடுகிறோம். சகோதரர்கள் ஒருவர் சிண்டை ஒருவர் பிடித்துக் கொண்டு நிற்கிறார்கள். சகோதரிகள் ஒருவருக்கொருவர் சண்டை போடுகிறார்கள். கணவனும் மனைவியும் ஆத்திரப்பட்டுக் கொண்டு விபரீதமாக நடந்து கொள்கிறார்கள். இருந்தாலும் அன்பு இதெல்லாவற்றையும் தீர்த்து வைக்கும் சக்தி உடையது. இளம் வயதிலும் சரி, வயோதிக தசையிலும் சரி, இறந்த பின்னரும் சரி அன்புதான் மேலாக நிற்கிறது. பார்! இந்தக் குடும்பத்தில் உங்கள் பாட்டி வைத்திருந்த அன்பு இன்னும் ஜீவனுடனிருந்து இந்தக் குடும்பத்தையே காப்பாற்றி வருகிறது!" என்று கூறி முடித்தாள் கிழவி.

நாணுவின் கண்களில் நீர் முட்டிக் கொண்டு நின்றது. கோபி வெட்கத்தினால் தலையைக் குனிந்து கொண்டான். நளினி ஸரோஜின் அருகில் சென்று அவளுடைய கையை அன்புடன் பிடித்துக் கொண்டாள். சங்கரும் ராமேஷும் சந்தோஷம் தாங்க முடியாமல் குட்டிக் கரணம் போட்டார்கள்.



அதே சமயம் கோபி, நாணு இவர்களின் தாயார் பூஜை அறைக்குள் சென்று அவர்களுடைய குல தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். பயபக்தியுடன் மூன்று கை புஷ்பத்தை எடுத்து விக்கிரகத்தின், பாதத்தில் சமர்ப்பித்தாள். கோப வெறி கொண்டு அடித்துக் கொள்ள ஆரம்பித்த தன் குழந்தைகளுக்குப் புத்தி தெளிவடைந்ததைக் குறித்து ஒரு கை நிறையப் புஷ்பங்களை எடுத்துக் குல தெய்வத்தின் பாதத்தில் அர்ச்சனை செய்தாள்; காலஞ் சென்ற உத்தமி பாட்டியின் ஞாபகார்த்தமாக ஒரு கை புஷ்பங்களை எடுத்துப் போட்டாள்; தன் குடும்பத்துக்கே மகத்தான அனர்த்தத்தை உண்டு பண்ணக் கூடிய தன் குழந்தைகளின் சண்டையைத் தீர்த்து வைப்பதற்காக, உற்ற சமயத்தில் கண்ணில் வராத வேலைக்காரக் கிழவியை உதவிக்கு அனுப்பிய குல தெய்வத்தின் பாத கமலங்களில் மூன்றாவது கை புஷ்பத்தை எடுத்துச் சாத்தினாள்.

# படித்துப் பாருங்கள்!

## ஆழ்வார்கள் கண்ட அல்லிக்கேணி

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பார்த்தசாரதியாக நின்ற திருக்கோலத்தில் இருந்து பக்தர்களுக்குச் சேவை சாதிக்கும் திவ்ய க்ஷேத்திரம் திருவல்லிக்கேணி. இந்தத் திவ்ய க்ஷேத்திரத்தைப் பற்றிய வரலாறுகளும் பக்த சிரோமணிகளான ஆழ்வார்கள் அவ்வப்போது இயற்றிய கீர்த்தனைகளும் தமிழ்ப் பாசுரங்களும் இந்நூலில் தொகுக்கப்பட்டு மிளிர்கின்றன.

எழுதியவர்: திருமங்கை கல்லான்; கிடைக்கும் இடம்: 34, பெத்துநாயக்கன் தெரு, ஜி. டி. சென்னை 1; விலை 12 அணா.

## கந்தர்வ கோட்டை

பீஜபூர் சேனாபதி சையத் அலியின் மகள் ஆயிஷா இணையற்ற ரூபவதி. உலகத்து ரூபவதிகள் எல்லாருக்கும் ஏற்படும் துர்ப்பாக்கியம் அவளுக்கும் ஏற்படுகிறது. அதாவது அவளை இருவர் காதலிக்கின்றனர். ஒருவன் காஸிம்கான் இளைஞன். மற்றவன், அஸப்கான்—கிழவன்; ஆனால் பிரதம மந்திரி. அழகி ஆயிஷாவின் உள்ளம் இளைஞனும் வீரனுமாகிய காஸிமையே நாடியது. அஸப்கான் அவளை அடையும் பொருட்டுச் செய்த சூழ்ச்சிகளெல்லாம் பயனற்றுப் போயின. எதிர்பாராத திடுக்கிடும் பல சம்பவங்களுக்குப் பிறகு, அக்கிரமம் செய்தவர்கள் தண்டனைக் குள்ளாகிறார்கள். இளங் காதலர்கள் ஒன்றுபடுகின்றனர்.

எழுதியவர்: ஆர். எஸ். மணி; பிரசுரம்: கலைமகப் பிரசுராலயம், சென்னை 1. விலை ரூ. 1.

## சிவானந்த மஞ்சரி

இமய மலையில் ரிஷிகேசத்தில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு, மாசற்ற வாழ்க்கை வாழ்ந்து வரும் ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளும், அவரது உபதேச மொழிகளும் அடங்கியிருக்கின்றன இந்நூலில்.

ஆன்மீகப் பாதையில் செல்ல அவாக் கொள்ளுபவர்களுக்கு இந்நூல் பெரிதும் உபயோகமாயிருக்கும்.

பதிப்பாளர்: டாக்டர் வி. எல். மணி; கிடைக்கும் இடம்: சிவானந்த புத்தகப் பதிப்பகம், ரிஷிகேசம். விலை ரூ. 1—8—0.

## முகாரு முல்லை

நீனன் நூர்ஜியை விரும்பினான். நூர்ஜியும் நீனனை விரும்பினாள். ஆனால் நூர்ஜியின் பாட்டன் அவளைத் தன் மகன் அப்துலுக்கு மணம் முடிக்க விரும்பினான். நீனன் யுத்தத்தில் சேர்ந்து கடல் கடந்து சென்றுவிட்டான். அப்துலை மணக்க விரும்பாத நூர்ஜி வீட்டை விட்டு வெளியேறினாள். கடைசியில் நீனன் நூர்ஜியின் சொந்த சகோதரன் என்பது வெளியாகிறது. கதையின் ஆரம்பத்திலேயே காதலும் கல்யாணமும் முறிந்து போனாலும் மனம் கலங்கும்படியாக எந்தச் சம்பவமும் சேர்ந்து விடவில்லை.

எழுதியவர்: வி. ஆர். நரஸிம்மராஜ்; பிரசுரம்: வண்ணத் தாமரை வெளியீடு, 7, குழந்தை தெரு, சென்னை—3. விலை: ரூ. 2.

## பயம் நீங்கியது

டைப்பிஸ்ட் சங்கரன் என்றுமில்லாத திருநாளாக ஒரே உற்சாக புருஷனாகக் காணப்பட்டான். எனக்கு ஒரே அதிசயமாக இருந்தது!

பொதுவாக சங்கரன் "ஸார், எனக்கு இந்த உத்தியோகம் நிலைக்கும் என்று தோன்றவில்லை!" என்று அலுப்புடன் சொல்லிக் கொள்வான்.

"ஏன்?" என்பேன்.

"மானேஜர் டைப் பண்ணிக் கொண்டு வரச் சொன்ன கடிதத்தில் மூன்று நான்கு தப்புகள் இருந்தன. இத்தனை பிழைகளுடன் டைப் அடிக்கும் ஒருவனை ஒரு மானேஜர் தம் காரியாலயத்தில் ஏன் அதிக நாட்கள் வைத்துக் கொள்ளப் போகிறார்!" என்பான்.

இதற்கு நாம் என்ன பதில் சொல்ல முடியும்!

இப்படி அவன் நாளுக்கு நாள் அதிகத் தப்புகள் பண்ணி நாளுக்கு நாள் சோர்ந்து கொண்டிருந்தான். இப்படிப்பட்டவன் திடீர் என்று ஒரே உற்சாகமாக இருக்கிறான் என்றால் அதிசயமாயிருக்காதா! ஆகவே அவனை அணுகி, "என்ன மிஸ்டர் சங்கரன்! ஏது இன்றைக்கு ஒரே குஷியாக இருக்கிறாப் போலிருக்கிறதே!" என்று கேட்டேன்.

"ஆமாம்! இனிமேல் நம்ம உத்தியோகம் போகாது! காயமாகி விட்டாற் போல்தான்!........." என்றான்.

"ஏது! இன்னிக்கு ஒரு தப்புக்கூட இல்லாமல் மானேஜர் சொன்ன கடிதங்களை டைப் பண்ணிக் கொடுத்து விட்டாயோ!" என்று கேட்டேன்.

"அதெல்லாம் இல்லை......இன்று மானேஜர் எனக்கு ஒரு ஆங்கில அகராதியே வாங்கிக் கொடுத்து விட்டார்" என்றான்!

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 49. இரத்த அமுக்கமும், இருதய வியாதிகளும்

இருதயம் நம் உயிர் உள்ளளவும் துடித்துக் கொண்டேயிருக்கும். இருதயம் ஒவ்வொரு தடவை துடிக்கும்போதும் ரத்தத்தை அடித்து அனுப்புகிறது. இருதயத்தில் நான்கு அறைகள் உண்டு. கெட்ட ரத்தமானது இருதயத்தின் முதல் அறையில் வருகிறது. பிறகு அது மற்றொரு அறைக்கு அனுப்பப்படுகிறது. அங்கிருந்து நுரை ஈரல்களுக்குப் பிராணவாயுவைப் பெறப் பரவிச் செல்லுகிறது. அங்கு நாம் சுவாசிக்கும் பிராணவாயுவினால் சுத்தம் செய்யப்பட்டு மறுபடியும் இருதயத்தின் மூன்றாவது அறைக்கு வருகிறது. பிறகு நான்காவது அறையின் வழியாக பெரிய ரத்த நாளங்களின் மூலம் பல கிளைகளாகப் பிரிந்து உடல் முழுவதும் பரவுகிறது. இருதயம் துடிக்கும் துடிப்பினால்தான் ஒரு அறையில் சேர்ந்த ரத்தம் மற்றொரு அறைக்கும், அதிலிருந்து நுரை ஈரலுக்கும் மறுபடி வந்து சேர்ந்த ரத்தத்தை நான்காவது அறைக்கும் பிறகு சரீரம் பூராவிற்கும் பரவச் செய்கிறது. இப்படி இடைவிடாமல் வேலை செய்யும் இருதயமானது உருவத்தில், அவரவர்களின் கை முஷ்டி அளவுதான் இருக்கிறது. இது சரிவர வேலை செய்ய வேண்டுமானால், தைராய்டின் துணை வேண்டும். ஆனால் தைராய்ட், அட்ரேனல் கோளத்தின் மூலம் தன் வேலையைச் செய்விக்கிறது. இந்த அட்ரேனல் கோளம் இரண்டு மூத்திரக் காய்களின் மேல் இருக்கிறது. அதன் ரசம் இரத்தத்தில் கலக்கத் தனி நரம்பு வழிகள் கிடையாது. ரத்தம் அதன் வழியே பாய்ந்து செல்லும்போது அதன் ரசத்தையும் சேர்த்துக்கொண்டு செல்லுகிறது.

இருதயம் நின்று போனால் உடனே சாவுதான். அப்படி நின்றுவிட்ட இருதயத்தை அட்ரேனல் கோளத்தின் ரஸத்தினாலான மருந்தை ஊசி மூலம் செலுத்தினால் அது மறுபடியும் ஐந்து நிமிஷமோ பத்து நிமிஷமோ ஓடச் செய்ய முடியும் என்று டாக்டர்கள் பல ஆராய்ச்சிகளின் மூலம் கண்டு பிடித்திருக்கிறார்கள். பெரிய தனவந்தர்கள், தங்கள் சொத்தைப் பற்றி ஒரு ஏற்பாடும் செய்யாமல் இறந்து விட்டால், இந்த மருந்தை ஊசி மூலம் செலுத்தி விவரம் அறிய முடிகிறது. அதே போல பெரிய ராணுவ உத்தியோகஸ்தர்கள் ரணகளத்தில் இறந்துவிட்டால் உடனே இம் மருந்தின் மூலம் உயிர்ப்பித்து மேற் கொண்டு யுத்தம் நடத்த வேண்டிய பல ரகசியங்களை அறிய முடிகிறது. இம்மாதிரி நடந்த இரண்டாவது யுத்தத்தின் போது பல நடந்தன. ஆகவே அட்ரேனல் கோளத்தின் ரஸம் இருதயத் துடிப்புக்கு முக்கியமானது என்று தெரிகிறதல்லவா! ஆனால் இந்த சிகிச்சை இருதயம் நின்றுவிட்டாலும், ரத்தம் உறைவதற்குமுன், உடனே செய்ய வேண்டும்.

ரத்த அமுக்கம் (Blood Pressure) 40, 50 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு வரலாம். அதிகப் பொறுப்பான காரியங்களை வகிப்பவர்கள், அதிக மனக் கிளர்ச்சிக்கு ஆளாகின்றனர். ஒவ்வொரு கிளர்ச்சியின் போதும் அட்ரேனல் கோளம் அதிக ரஸம் சுரக்கும். அதனால் அடிக்கடி இருதயம் அதிவேகமாய்த் துடிக்கும். ஒரு பூனை நன்றாய் நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருந்தது. அதன் அருகில் நாய் குலைப்பதைப் பதிவு செய்த ஒரு கிராமபோன் ரிகார்டை வைத்தார்கள். அது உடனே எழுந்து உடலை வில்போல் வளைத்து, நகங்களை நீட்டிக் கொண்டது. மயிர்க் கால்கள் எல்லாம் குத்திட்டு நின்றன. அச்சமயம் அப்பூனையின் மேல் ப்ளூரோஸ்கோப் என்னும் கருவியை வைத்துப் பார்த்த போது, அட்ரேனல் கோளத்திலிருந்து, குபுகுபுவென்று ரஸம் சுரந்து வந்து கொண்டிருந்ததாம். அதிலிருந்து ஒவ்வொரு அதிர்ச்சி, அல்லது கிளர்ச்சியின் போதும் அட்ரேனல் ரஸம் அதிகமாக ரத்தத்தில் கலக்கப்படுகிறது என்று நன்றாய்த் தெரிகிறது. ஆகையால் இந்தக் காரணத்தினாலும் இரத்த அமுக்கம் அதிகம் உண்டாகலாம்.

ஒருவருக்குச் சாதாரணமாய் ரத்த அமுக்கம் 100, 120 இருந்தால் சரியானது. சிலருக்கு 80, 90 இருப்பதுமுண்டு. அதனால் ஒரு அபாயமும் வராது. 140, 150, 160, 180 என்று ஆகும்போது இருதயம் அளவுக்கு மீறித் துடிக்கும். அப்பொழுது ஆயாசம், மயக்கம்,



"உங்க பையன் ரொம்ப சமத்து. வாயே திறக்க மாட்டான் என்றேனே! இப்பமட்டும் கொஞ்சம் வாயைத் திறக்கச் சொல்லுங்கள்: அதனாலே அவன் சமத்து கொஞ்சம் குறைந்தாலும் பரவாயில்லை!"




“திறப்பு விழா எப்பொழுது, எப்பொழுது என்று ஏன் ஐயா தவிக்கிறீர்? திறப்பாளர் காருக்குள் மாட்டிக் கொண்டு கதவைத் திறக்க முடியாமல் தவிக்கிறார்!”

தலைவலி, பட படப்பு, நிதான மிழத்தல் முதலியன வெல்லாம் உண்டாகும்.

சிலருக்குக் காப்பி இருதயம், டீ இருதயம் மதுபான இருதயம், புகையிலை இருதயம், என்றும் இருக்கிறது. அதாவது இவைகளை அதிகம் உபயோகிப்பதால் இருதய தசைகள் வீங்கிச் சாதாரண இருதயத்தைவிடச் சற்று பெரிதாகவும், அதனுள் நரம்புகள் சரியான படி இல்லாமல் சிதைந்து மிருக்கும். இவர்களுக்கும் சற்று வயதானதும் ரத்த அழுக்கம் வருவதுண்டு.

சரீரம் அளவுக்கு மீறிப் பருத்து இருப்பவர்களுக்கும் இரத்த அழுக்கம் அதிகமாய் இருப்பது சாதாரணம். அதிகமாய் இருக்கும் சதைப் பாகங்களுக்கெல்லாம் இரத்தம் போகவேண்டுமல்லவா! அதற்காக இருதயம் தீவிரமாக அடித்து அனுப்பவேண்டி யிருக்கிறது. எத்தனை நாள்தான் இம்மாதிரி இருதயம் கஷ்டப்பட முடியும். சற்று வயதானதும், அதன் துடிப்பு சில சமயம் அதிகமாகவும், சில சமயம் மெதுவாகவும் நடக்கும். அற்ப வேலை செய்தாலும் மூச்சு இளைக்கும். மேல் மூச்சு வாங்கும். இவர்கள் முதலில் உணவுப் பத்தியமிருந்து, உடலை ஆசனங்களால் கரைத்துக் கொண்டால்தான் மீதமுள்ள ஆயுளைச் சுகமாய் அனுபவிக்கலாம். இல்லையானால் நரக வேதனைதான். பலூனில் காற்று அதிகமானால் என்ன நேரும்! அக்கதிக்குத்தான் ஆளாவார்கள். பாவம்! டாக்டர்கள் என் செய்வார்! ‘அசையக்கூடாது; படுக்கையிலேயே இருக்க வேண்டும். நடமாடினாலும் இருதயம் தாங்காது’ என்பார். இவர்கள் அசையாது இருக்க இருக்கச் செல்லக் குழந்தைபோல் சதை, தன் பாட்டுக்கு வளர்ந்து கொண்டே போகும். இம்மாதிரி கேஸ்கள் எல்லாம் டாக்டர்களுக்கு நிரந்தர பென்ஷன் மாதிரி. [illegible] சர்வாங்காசனத்தைப் பிறர் உதவியைக்கொண்டு, ஆரம்பத்தில் மிகச் சிறிய அளவு ஒரு நிமிஷம் விதம் பலதடவை செய்து, தினம் தினம் சிறிது நேரத்தை அதிகமாக்கிக் கொண்டு வரவேண்டும். அப்பொழுதுதான் தைராய்ட் கோளம் விழிப்படைந்து கொழுப்பு வஸ்துக்களைக் கரைக்கும். உடல் கனம் குறையும். இருதயம் கஷ்ட மில்லாமல் தன் வேலையைச் செய்யும்.

சிலருக்கு ரத்தம் சரிவரச் சுத்தமாகாததினால் இருதய நோய்கள் வருவதுண்டு. இரத்தம் இரண்டு இடங்களில் சுத்தமடைகிறது. ஒன்று மூத்திரக் காய்களில். அங்கு ரத்தம் வந்து, கழிவு பதார்த்தங்கள் வடி கட்டப் படுகிறது. இரண்டாவது நுரை ஈரலில் சுத்தமடைகிறது. இரத்தத்திலுள்ள கரிய மலவாயு பிரிந்து மூச்சாக வெளியில் செல்லுகிறது. நாம் இழுக்கும் பிராண வாயுவினால் இரத்தம் சிவப்பாக மாறி சுத்தியடைந்து, சக்தி உண்டாகி இருதயத்திற்குச் செல்லுகிறது. இவைகளில் எங்கு அதன் வேலைகள் சரிவர நடவா விட்டாலும் இருதயம் பலவித கோளாறுகள் அடையும். மூத்திரக் காய் பழுதடைந்து, அசுத்தத்தைச் சரிவர நீக்கா விட்டாலும் இருதயம் பழுதடையலாம். நுரை ஈரல் பழுதடைந்து, பிராணவாயு சரிவரக் கிடைக்கா விட்டாலும் இருதயம் பழுதடையலாம். மூத்திரக்காய்க் கோளாறைச் சீர் செய்யாமல் இருதயத்துக்கு மட்டும் வைத்தியம் செய்வதால் பலன் இல்லை. முதலில் மூத்திரக் காய் சீர் திருத்தம் செய்ய வேண்டும். அதற்குச் சர்வாங்காசனம்தான் உகந்தது.

இருதய வியாதி யுள்ளவர்களுக்கு அஜீரணம், வாயு உபத்திரவம் முதலியவைகள் ஏற்படும். தைராய்ட் குறை இருந்தால் என்ன தான் ஏற்படாது. ஆகையால் சர்வாங்காசனமே சிறந்த மருந்து. அதிகப் பொறுப்பான வேலையுள்ளவர்கள் அவைகளைச் சற்றுக் குறைத்து அவ்வப்போது ஓய்வு எடுத்துக்கொண்டு சர்வாங்காசனம் செய்ய வேண்டும். காபி, டீ, புகையிலை வஸ்துக்களால் இரத்த அழுக்கம் இருந்தால் சிறிது சிறிதாக அப்பழக்கங்களைக் குறைத்து வந்து பூரணமாய் விட்டுவிட வேண்டும். சர்வாங்காசனப் பயிற்சியையும் விடாமல் செய்ய வேண்டும்.

சிலருக்குப் பல நோய்கள், ஜுரங்கள் வந்து மிகக் கடுமையான மருந்துகள் சாப்பிட்டு (வால்வுகள்) இருதயக் கதவுகள் பழுதடைந்திருக்கும். அவர்கள் வேறு வழியில்லாமல் திண்டாடுவதைவிடச் சர்வாங்காசனம் செய்தால் பலன் ஏற்படலாம். ஆனால் இரத்த அழுக்க முள்ளவர்கள், அதன் சரியான காரணமறிந்து, ஒரு ஆசன நிபுணரின் ஆலோசனையின் பேரில்தான் ஆசனங்கள் பழகவேண்டும். அவர்கள் சர்வாங்காசனம் தவிர மற்றொன்றும் பழகக்கூடாது. எதைப் பழகலாம் கூடாது என்பதெல்லாம், அவரவர்களின் உடல் நிலை, வயது, நோயின் தன்மையைப் பொறுத்தது. (தொடரும்)




கொடுங்குளிர் நடுக்கும் இரவு. வானவீதியில் நக்ஷத்திரங்கள் முத்துப்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன. வானவீதியைப் போலவே நிலப்பரப்பிலும் பனித்துளிகள் முத்துப்போல் விழுந்திருந்தன. நாற்புறமும் மௌனம் நிலவும் கும்மிருட்டு நிலவி யிருந்தது. இயற்கையின் ஒவ்வொரு அணுக்களும் உணர்விழந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தன. அந்தக் குடல் நடுக்கும் இரவு பாதிக்குமேல் கழிந்து விட்டது.

விழுப்புரம் பிளாட் பாரத்தில் மின்சார விளக்குகள் பளிச்சென்று பிரகாசித்துக்கொண் டிருந்தன. திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் அப்பொழுது தான் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. இன்னும் பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் அது சற்றுச் சிரமப் பரிகாரம் செய்துகொண்டு புறப்பட வேண்டியதுதான்.

ஒன்று, இரண்டு, மூன்று...அட! பதினைந்து நிமிஷங்கள் போவது தெரியாமல் போய் விட்டனவே! அதோ ரயில் புறப்பட வேண்டியதற்கு அறிகுறியாக மணியும் அடித்து விட்டதே! யாத்திரிகர்கள் அனைவரும் தம் தம் பெட்டிகளில் பெட்டிப் பாம்பைப் போலச் சுருட்டி மடக்கிக்கொண்டு படுத்து விட்டனர். ஆனால் ஒரே ஒரு ஆள்மட்டும் வண்டிக்குப் பின்னால் சற்று இருட்டு அடைந்த இடத்தில் திருடனைப்போல 'திரு திரு' என்று விழித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான். உடலை உலுக்கும் காற்றில் குளிர் தாளமாட்டாமல் அவன் உடல் வெட வெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தக் குலை நடுக்கம் எடுக்கும் குளிரை அவன் சிறிதாவது பொருட்படுத்தினதாகத் தெரியவில்லை. வண்டி ஊதி விட்டு நகர ஆரம்பித்ததும் அதில் ஏறித் தொத்திக்கொண்டு விட வேண்டும் என்ற ஒரே சிந்தனை, ஒரே எண்ணந்தான் அவனுக்கு.

டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்து கொண்டிருந்த அவனை டிக்கட் பரிசோதகன் இறக்கி ஸ்டேஷனுக்கு வெளியே கொண்டு விட்டு வந்திருந்தான். ஆனால் வெளியே போவதுபோல் போன அவன் வேறு வழியாக மறுபடியும் வந்து வண்டி புறப்படுவதை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

அவனுக்கு ஓடும் ரயிலில் ஏறிப் பழக்கம் இல்லை. இருந்தாலும் அவன் அந்த வண்டியில் போய்த்தான் ஆகவேண்டும். ஆகவே, அவன் மனத்தில் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு வண்டி ஏறத் தயாராக நின்று கொண்டிருந்தான். இந்த வண்டிதான் முதன் முதலில் திருச்சிக்குப் போகும் வண்டி. இதைவிட்டு விட்டால் இன்னும் மணிக் கணக்காக அல்லவா அவன் அடுத்த வண்டிக்குக் காத்திருக்க வேண்டும்! அவனுக்கிருந்த அவசரத்துக்கு அவ்வளவு நேரம் காத்திருக்க முடியுமா!

டிக்கட் பரிசோதகன் கையில் காசு இல்லாததனால் அவனை இறக்கிவிட்ட பொழுது அவன் தன் கஷ்டங்களை யெல்லாம் அவனிடம் சொல்லி அழுதான். ஆனால் அந்தக் கல் நெஞ்சக் காரனுக்குக் கடுகளவாவது கருணை பிறந்தால்தானே! அவன் தன் கடமையைச் செய்து கீழே இறக்கி விட்டுவிட்டான். கடமையில் கண்ணாயிருந்த அவனைக் குறைகூறி என்ன பயன்! ஆனால் மாரிமுத்துவுக்கு அந்த வண்டியில், ஆம்! அதே வண்டியில் திருச்சி போய்த்தான் ஆகவேண்டும். உயிரே போவதானாலும் சரி, அவன் அந்த வண்டியில் ஏறித் திருச்சிக்குப் போய்த்தான் ஆகவேண்டும்.

உயிராவது, போகவாவது! அவன் உயிர் இப்பொழுது அவனிடமா இருந்தது! திருச்சியில் அல்லவா சஞ்சரித்துக் கொண்டிருந்தது! அங்கே உள்ள அநாதை விடுதி ஒன்றில் இருந்த

தாயில்லாக் குழந்தையான மங்களத்தைச் சுற்றியல்லவா அவன் உயிர் சஞ்சலத்துடன் சஞ்சரித்துக் கொண்டிருந்தது! உயிர் இருக்கும் இடத்துக்கு அவனுடைய உடலும் போய்த்தானே ஆகவேண்டும்!

மணி அடித்ததுதான் தாமதம்; கார்டு பச்சை விளக்கை அசைத்துக் காட்டியவாறே 'விஸில்' எடுத்து ஊதினான். வண்டியும் அவன் ஊதலுக்குப் பதில் அளிக்கும் முறையில் ஒருமுறை ஊதிவிட்டு இரை தின்ற மலைப்பாம்பைப் போல மெதுவாக ஊரத் தொடங்கியது.

மாரிமுத்து சுற்று முற்றும் ஒரு தடவை பார்த்தான். பிறகு எப்படியோ தட்டுத் தடுமாறி 'லபக்'கென்று வண்டியில் தொத்திக் கொண்டு விட்டான். வண்டி பிளாட்பாரத்தை விட்டு நகர்ந்ததும், மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு அவன் உள்ளே போக முயன்றான். ஆனால் அவன் முயற்சி வீணாயிற்று. ஏனெனில் அது இரண்டாவது வகுப்புப் பெட்டி. உட்புறமாகக் கதவு தாளிடப்பட்டிருந்தது. அந்தப் பெட்டியின் கதவு வெளிப்புறம் திறப்பதாக இல்லாமல் உட்புறம் திறப்பதாக அமைந்திருந்ததே, அதை அந்தத் துரதிர்ஷ்டக்காரன் பண்ணியிருந்த அதிர்ஷ்டங்களில் ஒன்றாகத்தான் சொல்லவேண்டும். இது ஒரு அதிர்ஷ்டமா! அந்த அதிர்ஷ்டக் கட்டையினால் பெட்டிக்குள்ளே நுழைய முடியவில்லையே!

அதுவோ எக்ஸ்பிரஸ் வண்டி! போகப் போக அது தன் வேகத்தைக் காட்டிற்று. மணிக்கு முப்பது மைல் வேகம் என்றால் அது சாதாரண வேகமா! அது மட்டும் இல்லை அன்று அந்த வண்டி சற்றுத் தாமதமாக வந்திருந்தது. அந்தத் தாமதத்தைச் சரிக் கட்டுவதற்காக டிரைவர் ரெகுலேட்டரைத் திறந்தே விட்டு விட்டான். ஆனால் மாரிமுத்துவின் மனவேகம் எங்கே! ஊர்ந்து செல்லும் அந்த ரயிலின் வேகம் எங்கே! மாரிமுத்துவின் மன வேகத்துக் கெதிரே ரயிலின் வேகத்தை ஆமை வேகமாகத்தான் சொல்ல வேண்டும்!

ஆறுகள் நஞ்சுண்ட நாகத்தைப் போல் வளைந்து வளைந்து ஓடிக் கொண்டிருந்தன. நிர்மானுஷ்யமான காடுகள் இரவின் இருளுடன் போட்டி போட்டுக் கொண்டிருந்தன.

மாரிமுத்து அந்தக் காடாந்தகாரத்திலும் தன் வாழ்வின் ஒளியைப் பற்றிச் சிந்தித்தவாறு பிரயாணம் செய்து கொண்டிருந்தான்.

நாள் முழுவதும் வேலைசெய்தால் அவனுக்குக் கிடைக்கப் போகும் கூலி ஒன்றரை ரூபாய் தான்! மாதம் முழுவதும் மூச்சைப் பிடித்துக் கொண்டு வேலை செய்தால் நாற்பத்தைந்து ரூபாய் கிடைக்கும். அந்த நாற்பத்தைந்து ரூபாய்க் காசுதான் அவனைத் திருச்சிக்கு அருகிலிருந்த ஒரு குக்கிராமத்திலிருந்து சென்னைக்குக் கொண்டு வந்து சேர்த்திருந்தது. கையில் காசு இல்லாத தோஷம், மாரிமுத்து இப்படிப்பட்ட மரணச் சுழலில் சிக்கும்படியாகி விட்டது.

மாரிமுத்துவுக்கு ஆலையில் உள்ள 'பாய்லர்'ரில் கரி அள்ளிப் போடும் வேலை. விடியற் காலையில் ஆலைச் சங்கின் அலறல் கேட்டதும் அவன் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடியாக வேண்டும். அப்புறம் மாலையில் வேலை விட்டதும்தான் அவன் 'அப்பாடா!' என்று பெருமூச்சு விடமுடியும். சிற்சில சமயம் கரி வாரிப் போட்டுக் கொண்டிருக்கும் பொழுதே, தாயில்லாக் குழந்தையான தன் மகள் மங்களத்தின் முகம் அவன் நினைவுத் திரையில் எழுந்து வேலை செய்ய வொட்டாமல் கண்களை நீரால் மறைக்கும். அடுத்த கணம் அவனுடைய கடமை உணர்ச்சி அவனுடைய கரி படிந்த முகத்தையும், குழந்தையின் முகத்தையும் அந்தக் கண்ணீரைக் கொண்டே அலம்பிவிடும்.

அவனுடைய கூட்டாளிகள், "மாரி, ஏன் அழுகிறாய்! என்ன விஷயம்!" என்று அநுதாபத்துடன் விசாரிப்பார்கள். மாரிமுத்து தன் மனத்துயரத்தை மனத்துக்குள்ளேயே மறைத்துக் கொண்டு, "ஒன்றுமில்லை, கரித்தூள் கண்ணில் விழுந்து விட்டது!" என்று சொல்லி மழுப்பி விடுவான். இல்லாவிட்டால், "புகை தாளவில்லை" என்று சாக்குச் சொல்வான்.

அவனுடைய கண்களைக் கரித்தூள் விழுந்து உறுத்தவில்லை. மங்களம் என்னும் சின்னஞ்சிறு பெண்ணின் நினைவுதான் உறுத்துகிறது என்பது யாருக்காவது தெரிந்தால்தானே! பச்சிளங் குழந்தையான அவளைத் தனியே விட்டு விட்டுப் பாவி வயிற்றைக் கழுவவேண்டி இவ்வளவு தூரம் வந்திருக்கிறானே, அவளுடைய நினைவுதான் அவன் மனத்தை இவ்வளவு சங்கடத்துக்குள்ளாக்கி யிருக்கிறது என்னும் விஷயம் பிறருக்குத் தெரிய நியாயம் ஏது?

அவன் குடும்பத்தில் மங்களம் மட்டும் தான் எஞ்சி யிருந்தாள். அவனுக்கு இந்த உலகத்தில் யாராவது ஒரு உற்றார் உண்டு என்றால் அது மங்களம்தான். மங்களத்துக்காகத்தான் அவன் உயிர் வாழ்கிறான், உழைக்கிறான்;

## ராஜுவின் பதில்!

ராஜுவின் தகப்பனார் தமது ஆபீஸ் 'பைல்'களைப் புரட்டிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் அந்தப் பக்கம் வந்த ராஜு, "அப்பா! கோடி வீட்டுக் கோபு எல்லாப் பரீக்ஷைகளிலும் நூற்றுக்கு நூறு மார்க் வாங்கி யிருக்கிறான். அவனுடைய பரீக்ஷை பேப்பர்களை எங்கள் வாத்தியார் தமது மேஜையின் மேல் வைத்துக் கொண்டு வந்தவர்களுக் கெல்லாம் காண்பித்துப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்" என்றான்.

அதைக் கேட்டதும் ராஜுவின் தகப்பனார் கோபத்துடன், "ஏண்டா! அவன் நிறைய மார்க் வாங்கி யிருக்கிறான். நீ ஏன் வாங்கவில்லை! நீயும் நன்றாகப் படித்திருந்தால் நிறைய மார்க் வாங்கியிருக்கலாம் அல்லவா!" என்றார்.

"அப்பா! கோபுவின் குடும்பம் ரொம்பப் படித்த குடும்பத்தைச் சேர்ந்தது. அதனால்தான் அவன் நிறைய மார்க் வாங்க முடிந்தது. ஆனால் நம்முடைய..." என்று இழுத்தான் ராஜு. அப் பதில் அவரைத் தூக்கி வாரிப் போடச் செய்தது. —பி. எஸ்.



சோனிப் பயில்வான் :—'ஜோ லூயி'யை இரண்டாம் தடவையாகக் குத்திக் கீழே தள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்.

மற்றவர்:—என்ன? இரண்டாம் தடவையாகவா?...

சோனிப் பயில்வான்:—ஆமாம், ஏனெனில் முன்பு ஒரு தடவை நான் இப்படி நினைத்திருக்கிறேன்.

எல்லாம் செய்கிறான். மூன்று வருஷங்களுக்கு முன் அவனுடன் வாழ இன்னொரு நபர் அதிகமா யிருந்தார்கள். அந்த நபர் வேறு யாரும் இல்லை. அவனுடைய பெண்சாதி பாவாடைதான்.

பாவாடைக்கு வாழ்க்கையில் சுகம் என்பதே இல்லை. மாரிமுத்து ஒரு நாள்கூட உட்கார வைத்து அவளுக்குச் சோறு போட்டதில்லை. கல்யாணம் ஆன சில தினங்களுக்குள் கணவன் படுத்த படுக்கையாகி விடவே, அவள் நாலு வீடு பெருக்கி மெழுகிக் கூலி வேலை செய்து கணவனுக்கும் பொங்கிப் போட்டுத் தானும் உண்ணும்படியாகி விட்டது. அப்பொழுது வேலைக்குப் போனவள் சாகும் அளவும் வேலைசெய்த வண்ணமாகவேதான் இருந்தாள். வீட்டுக்குள்ளிருந்த வண்ணம் கணவன் சம்பாதித்துக் கொண்டு வந்து போடுவதைக் கொண்டு வாழ்வதற்கு அவள் தலையில் எழுதியிருந்தால்தானே!

கணவனுக்குச் சற்று உடல் நலம் ஏற்பட்டதும் அவனும் ஏதாவது சில்லுண்டி வேலை செய்ய வெளியே போய் வரலானான். இருவரும் பொழுது விடிந்ததும் விடியாததுமாகத் தங்கள் தங்கள் வேலையைக் கவனிக்கச் சென்று விடுவார்கள். பிறகு காலை வேளைகளில் இரை தேடச் சென்ற பறவைகள் மாலை வேளைகளில் கூட்டை வந்து அடைவதுபோல், விளக்கு வைக்கும் நேரத்துக்குக் களைத்துச் சளைத்துப் போய் வீட்டை வந்து அடைவார்கள். ஆனால் அதிலும் அவர்களுக்கு ஓர் ஆனந்தம்! பகல் முழுவதும் பிரிந்திருந்த தம்பதிகள் இரவு கூடுவது என்றால் ஒரு அலாதி ஆனந்தம் ஏற்படத்தானே செய்யும்!

அந்தக் குடிசையில் அவர்கள் இருவரையும் தவிர மூன்றாமவர் யாரும் இல்லை.

அந்த நாட்களில் மாரிமுத்துவும் பாவாடையும், குடிசை வாழ்வு நடத்தி வந்த பொழுதிலும் குபேர வாழ்க்கை நடத்துவதாகவேதான் எண்ணி வந்தார்கள். சித்திரை மாதத்துச் சந்திரிகை அவ்விளங் காதலர்களை இன்ப போதையில் ஆழ்த்தும். இளவேனிற் காலத்து இனியக் காட்சிகள் இன்ப போதையில் ஆழ்ந்திருக்கும் அவர்களைத் தலை கிறங்கச் செய்யும். குடிசையின் தரையைத் தெப்பமாக நனைக்கும் புரட்டாசி மாதத்தின் அடை மழைகூட அந்தத் தம்பதிகளை ஆலிங்கன பாசத்தில் கட்டுறச் செய்து ஆனந்தத்தைத்தான் அளித்து வந்தது. அந்த நாட்களில் அவர்களுக்கு உலகமே ஆனந்த மயமாகத்தான் தோற்ற மளித்தது. தங்கள் இருவரையும் தவிர உலகம் என்று ஒன்று இருக்கிறது என்பதைக் கூட மறந்து அவர்கள் இருவரும் இன்பத்திலே திளைத்திருந்தனர்.

ஆனால் - ஆனால் - ஒருநாள் பாவாடை விசாலமான இந்த உலகத்திலே மாரிமுத்துவைத் தன்னந்தனியனாகத் தவிக்க விட்டு விட்டுப் போய்விட்டாள். அதுமட்டுமா! தன் துயரம் அனைத்தையும் அவன் தலையிலேயே கட்டி விட்டும் போய்விட்டாள். ஒருகாலத்தில் மாரிமுத்துவுக்குக் கஷ்டத்திலும் கனகலோகமாகக் காட்சி அளித்த இந்த உலகம், இப்பொழுது பாழடைந்த பாலைவனமாகக் காட்சி அளிக்கத் தொடங்கியது. பாவாடை தன்னைப் பொய்யாக்கி இந்த மண்ணுலகை விட்டு மறைந்து விட்டபொழுதிலும், தன் ஞாபகச் சின்னமாக மங்களத்தை அவனுக்கு அளித்துச் சென்றிருந்தாள்.

மாரிமுத்துவுக்கு மங்களத்தின் பிறப்புத்தான் பாவாடையின் பிரிவுக்குக் காரணமாயிருந்தது. ஆகவேதான் அவன் மங்களத்தை உயிருக்கு உயிராக நேசித்தான். தன்னால் சரிவரப் போஷித்துக் காப்பாற்ற முடியாமற் போகவே, அவன் வேறு வழியின்றி அவளை அநாதை விடுதியில் சேர்த்து விட்டான். அவளுக்காகவே சென்னை வந்து கூலி வேலை செய்யவும் தொடங்கினான். வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி மாதம் மூன்று ரூபாய் அனுப்ப அவன் தவறினதே இல்லை.

அன்று காலைதான் அவனுக்கு அநாதை விடுதியின் அதிகாரியிடமிருந்து மங்களத்துக்கு உடல் நிலை கவலைக் கிடமாக இருக்கிறது என்றும் உடனே புறப்பட்டு வரும்படியும் தந்தி வந்திருந்தது. தந்தியைப் பார்த்ததும் அவன் பிரமை பிடித்தவன் போலானான். அவன் ஆலை அதிகாரியிடம் கெஞ்சிக் கூத்தாடி மூன்று நாட்கள் லீவு வாங்கிக் கொண்டு முதல் வண்டியிலேயே திருச்சிக்குப் புறப்பட்டான்.

திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் குறிப்பிட்ட சில ஸ்டேஷன்களில்தான் நிற்கும். அது மட்டும் அல்ல. மூன்றரை மணிக்குள்ளாகவே திருச்சியை அடைந்து விடும். மரணத்துடன் போராடிக் கொண்டிருக்கும் குழந்தையைக் கூடிய சீக்கிரம் பார்ப்பதற்குப் போக வேண்டுமென்றால் அந்த வண்டியை விட்டால் வேறு வண்டி ஏது! அது வரை அவன் அந்தப் 'புட்போர்டி'லேயே மரணத்துடன் போராடிக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்.

வண்டி வாயுவேக மனோவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. மாரிமுத்து தன் மனத்தில்

எழுந்த என்னை அலைகளுடன் போராடிக் கொண்டிருந்தான். நான் போய் உயிருடன் என் கண்மணியை காணுவேனா! அவளைப் பார்ப்பதற்குள்ளாக ஒருவேளை என் இந்தக் கண்கள் குளிரில் விரைத்துக் கல்லாகச் சமைந்து விடுமோ!

இன்று அவள்—அதுதான் பாவாடை-இருந்தால் நான் இவ்வளவு கவலையே பட வேண்டியிராது. தாயின் அரவணைப்பில் இருந்தாலே குழந்தைக்குப் பாதி வியாதி தானாகவே குணமாகிவிடும். தாய் குழந்தையின் முதுகை அன்புடன் தடவிக் கொடுத்தால் குழந்தை புத்துயிர் பெற்று எழுந்துவிடும். மங்களத்துக்கு நான் இல்லாவிட்டால் அது அவ்வளவு பெரிய கஷ்டமாகத் தோன்றாது. தாயின் இருதயத்திலே சுரக்கும் அன்பு ஊற்றுக்கு அப்படி என்ன மாயமந்திர சக்தி இருக்கிறதோ, தெரியவில்லை! குழந்தைகளுக்குத் தன் தாயைக் காட்டிலும் மேலான வஸ்து இந்தப் புவியில் இருப்பதாகவே தோன்றுவதில்லை.

பாவம்! மங்களத்துக்குத் தன் தாயின் முகம் நினைவிருக்கக் கூட நியாயம் இல்லை. 'தனக்கும் ஒரு தாய் இருந்தாள். அவளும் ஒரு குழந்தைக்காகத் தவம் கிடந்தாள்' என்னும் விஷயம் பிறந்ததுமே தாயைப் பறிகொடுத்த அந்தக் குழந்தைக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது!

கடவுளின் கருணையென்றுதான் சொல்ல வேண்டும். காலனின் வாயில் கட்டுண்ட நான் புத்துயிர் பெற்றேன். அவளும் என்னுடன் சிறிது சுகம் என்பதைக் கண்டாள். தானும் ஒரு குழந்தைக்குத் தாயாகவேண்டும் என்னும் ஆசை அவள் உள்ளத்திலே எல்லை கடந்திருந்தது. அந்த ஆசை ஒரு நாள் நிறைவேறவும் செய்தது. அவள் ஒரு பெண் குழந்தைக்குத் தாயானாள். அவளை அப்படியே உரித்து வைத்திருந்தது அந்தக் குழந்தை. ஆனால் அவள் தன்னுடைய மறு உருவத்தைக் கண்டு களிக்கக் கொடுத்து வைக்கவில்லை. குழந்தையின் ரோஜாக் கன்னங்களில் இரண்டு முத்தம் ஈந்து அன்பை அநுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. பாழும் தெய்வம் இந்த உலகத்துக்கு ஒரு புது ஜீவனை அளித்து விட்டு அவளைப் பிரித்து எடுத்துச் சென்று விட்டது!

அவளுடைய ஆத்மா நம் நிலைமையையும் குழந்தையின் நிலைமையையும் கண்டு வருந்தி அழாதா! அவளுடைய உள்ளத்தில் சொர்க்க லோகத்தை விட்டு இந்த மண்ணுலகுக்கு ஓடி வந்துவிட வேண்டும் என்ற ஆவல் எழுந்திருக்கும். அவள் உயிர் புழுவாய்த் துடிக்கும். கண்கள் நீரைக் கக்கி வீங்கிப் போயிருக்கும். அவளுக்கு அங்கே நிலை கொள்ளாது.

பாவம், மங்களம்! அவளைக் கவனிக்க யாராவது இருந்தால் தானே! தன் காலஞ் சென்ற தாயாரையும் பாக்கியமற்ற தந்தையையும் நினைத்து உருக அவள் அவ்வளவு அறிவு வந்தவள் அல்லவே! ஆனாலும் அவளுடைய மனம் என்னை நினைத்திருக்கும். நான் அருகே இருக்கவேண்டும் என்று அவளுடைய குழந்தை உள்ளத்துக்குத் தோன்றி யிருக்கும். அவள் அடிக்கடி நான் எப்பொழுது வருவேன் என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருப்பாள். அவளுக்கு நம்மைக் காணும் பாக்கியம் இருக்கிறதோ, இல்லையோ! யார் கண்டார்கள்!

பாவாடை இறந்த பின்னர், நான் மறுபடியும் மணந்து கொள்ள வேண்டும் என்று எவ்வளவோ சொன்னார்கள். ஆனால் மங்களத்தின் மீதுள்ள பாசம் என்னிடம் அறவே அந்த எண்ணத்தை அண்டவிடவில்லை. பாவாடை இல்லாவிட்டால் என்ன! பாவாடையே உருவாக மங்களம்தான் என் கண்முன் நிற்கிறாளே!

இவளை வளர்த்துப் பெரியவளாக்கிப் படிக்க வைத்து ஆளாக்கி ஒரு பையனைப் பார்த்துக் கட்டிக் கொடுத்து விட்டால் நம் கவலை தீர்ந்து விடும். மருமகப்பிள்ளை வந்ததும் அவன் உதவியைக் கொண்டு நம் கிழட்டுப் பிராயத்தை ஒரு விதமாகக் கடந்து விடலாம் என்று கோட்டை கட்டிக் கொண்டிருந்தேனே! ஆனால் என் அந்தக் கற்பனைக் கோட்டை என்ன ஆகுமோ! புரியாப் புதிராக இருக்கிறதே!

இம்மாதிரி மாரிமுத்து எத்தனை நேரம் யோசனையில் மூழ்கி யிருந்தானோ, தெரியாது! திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் 'சித்தம் போக்கு சிவம் போக்கு' என்று கடகடவென்று சப்தித்துக் கொண்டு கண்களுக்குப் புலனாகாத மரண ரேகையைப் போல வளைந்து நெளிந்து ஆற்றுப் பாலங்களைத் தாண்டிக் கொண்டு ஓடிக்கொண்டிருந்தது. திருச்சிராப்பள்ளியும் அதன் வேகத்துக்கு ஏற்றவாறு நெருங்கிக் கொண்டிருந்தது! ஆனால் மாரிமுத்துவின் மனமோ சிந்தனையில் லயித்து எங்கெல்லாமோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது!

"திருச்சி ஜங்ஷன்! திருச்சி ஜங்ஷன்!" என்று சத்தம் கேட்டது. பயங்கரப் புயலைப் போல வேகமாக வந்து கொண்டிருந்த வண்டியும் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. ஏறி இறங்கும் பிரயாணிகளின் இரைச்சல் எல்லோரையும் எழுப்பிவிட்டன. அநேகருடைய தூக்கம் கலைந்தது. ஆனால் மாரிமுத்து மட்டும் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் பிளாட்பாரத்துக்கு எதிர்ப்புறமிருந்த வாசற்படியிலே, சிலைபோலச் சமைந்து மங்களத்தின் நினைவில் அனைத்தையும் மறந்து உட்கார்ந்திருந்தான். அவன் உட்கார்ந்திருந்தது நிர்விகல்ப சமாதியில் உட்கார்ந்திருக்கும் யோகியின் நிலையை நினைவுறுத்தியது. அவன் சமாதி கலைந்ததா, கலைய வில்லையா என்பதைத் தெரிந்து கொள்ள மற்றவர்களுக்கு அப்படி என்ன அக்கறை வந்து விட்டது!

அவனுக்கு மங்களத்தைக் காணும் பாக்கியம் கிடைத்ததா இல்லையா என்பதும் யாருக்கும் தெரியாது. ஆனால் அவனுடைய அரை மூடிய கண்களில் ஆசையும் ஆவலும் நம்பிக்கையும் அவநம்பிக்கையும் மாறி மாறித் தோற்றமளித்துக் கொண்டிருந்தன.

வண்டி புறப்பட வேண்டியதற்கு அறிகுறியாக மணி அடித்தது. அப்பொழுதும் மாரிமுத்து மங்களத்தின் நினைவு கலைந்து எழுந்து வண்டியை விட்டு இறங்கினதாகத் தெரியவில்லை. விழுப்புரத்தில் இறக்கி விட்டது போல எந்த டிக்கட் பரிசோதகனும் வந்து அவனை வண்டியை விட்டு இறக்கி விடவில்லை. வண்டி திருச்சி ஜங்ஷனையும் விட்டுப் புறப்பட்டு விட்டது. மங்களத்தின் நினைவில் கல்லாகச் சமைந்திருந்த மாரிமுத்து ஸ்டேஷனில் இறங்கவில்லை. மங்களத்தைக் காணும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்திருக்குமா!

# பரிசு கிடைக்குமா ?


மரியாதை வாரத்தில் மிகவும் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் ஒரு போலீஸ்காரர் புறப்பட்டார்.
1


..வழியில் ஒரு அம்மாள் நடந்து வருவதைப் பார்த்தார். "ஆ! அந்த அம்மாளைக் காப்பாற்றுவோம்" என்று ஓடிக் காப்பாற்றினார்..
2


"என்ன அம்மா! சௌக்கியமா? பேரன் பேத்திகளெல்லாம் சௌக்கியமா? இப்போது எங்கே போகிறீர்கள்?"
3


"ஓ! அப்படியா! நானே உங்களைப் பத்திரமாக அழைத்துச் செல்கிறேன்"
4


"வாருங்கள் உட்கார்ந்து ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்."
5


"வராந்தாவில் உட்கார வேண்டாம்.
6


"இந்தக் கோலம் போட்ட மேஜையில் உட்கார்ந்து சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள்."
7


"ஸார்! அரைப் படி அரிசியை ரொம்ப மரியாதையுடன் கடத்தி வந்திருக்கிறேன்!"
8

# சாலை சொன்ன கதை

## ரவீந்திரநாத் டாகூர்

**தமிழாக்கம்: த. நா. குமாரஸ்வாமி**

நான் ஒரு பாட்டை. ரிஷி சாபத்தால் அகலிகை கல்லாய்ச் சமைந்தாள்; நானும் யார் சாபத்தினாலோதான் நீள் நெடும் பாதையாக மாறிவிட்டேன். மலைப் பாம்பைப்போல் வளைந்து வளைந்து காடு மலையெல்லாம் கடந்து, இருண்ட மாநிழல், வெட்டவெளி இவற்றின் புகுந்து ஊர் ஊராக, காடு நாடாகச் சுற்றி அலைந்து பழமையான ஜடப் பொருள்போல் இங்கு வீழ்ந்து கிடக்கிறேன். பொறுமையுடன் புழுதிப் படுக்கையில் புரண்டு சாபம் தீரும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நான் நகராமல் ஒரே இடத்தில் கிடந்தாலும், உண்மையில் எனக்கு ஏது ஓய்வு? கடினம் பாய்ந்த என் உடல் மீது பசும்புல் காண்பது அரிது. ஒரு சின்னஞ்சிறு காட்டுப்பூ கூட என் இதயத்தின் மிசை மலரவில்லையே! பேசும் சக்தி எனக்கு இல்லை. ஆனால் எல்லாவற்றையும் குருட்டுத்தனமாக உணர்ந்து மட்டும் வருகிறேன். இரவும் பகலும் என்மேல் படும் காலடிகளின் ஓசை, ஜடமான என் உறக்கத்திடையே லட்சக்கணக்கான கனவுகளென உலவுகிறது. காலடியை உணர்வதிலிருந்து ஒருவருடைய உள்ளத்தை எளிதாகப் புரிந்து கொள்ளும் ஆற்றல் எனக்குப் பிறந்தது. வீட்டை நோக்கிச் செல்வோர் யார், வேலை மேல் போவோர் எவர், விழவுக்கு விரைவோர், இடுகாட்டுக்கு ஏகுவோர் யார் என்றெல்லாம் நான் அறிவேன். இன்பத்தில் வாழ்பவர், ஆதரவின் நிழலில் வளருபவர், இவர்கள் என்மீது ஒற்றிச் செல்லும் பாத பரிசம் யாவும் என் வரைக்கும் அழியாச் சித்திரங்கள். அந்தக் காலடி வைப்பு என்னுள் நம்பிக்கை வித்தை ஊன்றுகிறது. அதிலிருந்து இளங்கொடி வளர்ந்து மலர்வது போல் எனக்குத் தோன்றும். வீடற்றோர், அகதிகள், இவர்களின் நடையில் உற்சாகமும் இல்லை, ஒரு நோக்கமும் இல்லை. வலம் இடம் என்பது இவர்கள் காலடி வைப்பில் காண முடியாது. நடந்தால்தான் என்ன, நின்றால்தான் என்ன, கிடந்தால்தான் என்ன என்று வெறுத்துச் செல்வதுபோல் இருக்கும். இத்தகையோர் நடந்து செல்வதனால் என்மீது இருக்கும் வறண்ட புழுதி பின்னும் வறட்சி அடைகிறது.

உலகத்து விஷயங்கள் என் செவிக்கு முழுவதும் எட்டுவதில்லை. இன்றுவரை, நூற்றுக்கணக்கான வருடங்களாக லக்ஷோப லக்ஷம் ஜனங்களின் கூத்தும் களிப்பும் கேட்டிருக்கிறேன். அவை யாவும் சில கணமே! மிகுதியைக் கேட்க நான் ஆவலுடன் செவி சாய்க்கும்போது வழிப்போக்கர்கள் மறைந்தே விடுகின்றனர். இந்த மாதிரி எத்தனை அரைகுறையான கதைகளும், பாட்டுக்களும் தூசொடு தூசாகப் போயினவோ, அவை யாருக்குத் தெரியும்! அதோ கேளுங்கள், ஒருவன் பாடுகிறான்: 'எவ்வளவு சொன்னாலும், மனத்திலுள்ளதைக் கூற முடியவில்லையே' — இப்படி பாடிக்கொண்டே போகிறான். 'ஆகா! யாரோ நீ? கொஞ்சம் நில்! மீதி அடியையும் பாடி விட்டுப் போ ...... நான் முழுவதையும் கேட்டு ஆனந்திக்கிறேனே!' எங்கே, அவன் நின்றால்தானே? பாடிக்கொண்டே போய் விட்டான். கடைசி சரணம் காதில் விழவே இல்லை. இந்த ஒரு வரி மட்டும் நள்ளிரவு தொடங்கியதும் என் அந்தரங்கத்துள் ஒலித்துக் கொண்டே இருக்கும் — 'எவ்வளவு சொன்னாலும் ......' போனவன் எவனோ? அவன் போகுமிடம் எனக்கு எப்படித் தெரியும்? 'கூற முடியாத வார்த்தையை...' ஒருவேளை தன் காதலியிடம் சொல்லத்தான் போகிறானோ? அவள் இன் முகம் காட்டும் போதாவது மனத்தில் உள்ளதை அவன் சொல்லுவானோ? அப்படித் தன் ஆருயிர்க் காதலியைக் கூடிய பிறகும் 'எவ்வளவு சொன்னாலும் மனத்திலுள்ளதைக் கூற முடியவில்லையே ...' என்று பாடுவானோ

தான் திரும்புவானோ? இவ்வாறு என்னென்னவோ பாவனைகள் என்னுள் செல்லும்.

உலகின் அழிவோ, அதன் நிலையான தன்மையோ, எவ்வாறு இருக்கும் என்பதை நான் அறியேன். ஓய்வின்றி எத்தனையோ கால்களின் அடையாளங்கள் என்மீது படிகின்றன. அவற்றின் ஏதாவது ஒன்றை மட்டும் என்னால் எப்படி நிரந்தரமாகப் பிடித்து வைத்துக்கொள்ள முடியும்? புதியன புகுந்தவுடன் பழையன மறைந்து விடும். போவது பின்னால் தன் குறி ஒன்றையும் விட்டுச் செல்லவில்லை. அப்படித் தன் நிலைச் சுவையிலிருந்து ஏதாவது அது விட்டுச் சென்றாலும், பின்னால் 'வரும் ஆயிரக்கணக்கான அடிச் சுவட்டின் கீழ் அது புழுதியுள் புகுந்து விடும். என்மேல் வளர்த்த புண்ணியவான்கள் ஊன்றிய அழியா வித்துக்களே என் மண்ணில் கலந்து, குருத்து விட்டு, ஓங்கி வளர்ந்து இருமருங்கிலும் தண்ணிழலைப் பரப்பி வழிப் போவோர்க்கு உதவி புரியும் மரங்களாகத் திகழ்கின்றன.

நான் யாருடைய இலக்கும் அல்ல. அவரவர் தம் பயனை எய்துவதற்குத் துணையாக நிற்கும் வெறும் வழியே நான். எவருடைய உறைவிடமும் அல்ல நான். ஆனால் எல்லோரையும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு சேர்ப்பதே என் வேலை. சாசுவதமாக என்மேல் யாரும் நிற்பதில்லை. அவர்கள் ஏனோ தங்குவதில்லை என்பதொன்றே எனக்குள்ள துயர். தொலைவில் உள்ளவர் என்னைத் திட்டுகிறார்களே ஒழிய வழித் துணையாகி, வீட்டு வாசல் வரைக்கும் கொண்டு விடுகிறேனே என்று என்னளவாகிலும் நன்றி பாராட்டுகிறார்களா? வீட்டுக்குப் போய் களைப்பாறுகிறார்கள்; மகிழ்ச்சி கொள்ளுகிறார்கள்; பிரிந்தவரோடு கூடிப் பேசி இன்புறுகிறார்கள். ஆனால் என்மீது களைப்பின் சுமையைத்தான் போடுகிறார்கள். என்னை வெறுக்கத்தான் செய்கிறார்கள் — 'அப்பா, மாளாத வழியாயிருக்கிறதே' என்று. என்மேல் ஆசை கொள்வார் இந்த அவனியில் இல்லையே! வீடுகளிலிருந்து வரும் மெல்லிய சிரிப்பின் அலைகள், சிறிது நேரமே என் செவியுள் அமுதைப் பாய்ச்சும்; நீண்ட நேரம் செவியாரக் கேட்கும் பாக்கியந்தான் இந்தப் பாழும் பாட்டைக்கு இல்லையே!

ஒரோரு சமயம் அதுவும் கிடைக்கும். சிறுவர் குதூகலமாகக் கூச்சலிட்டுக் கொண்டே என்னிடம் விளையாட வருவார்கள். வீட்டினுள் நிகழும் இன்பத்தின் வாடையை என்னிடம் கொண்டு வருவார்கள். அன்னையின் அன்பும் தந்தையின் ஆசியும், அவர்களுடன் வெளியேறிப் பாதையின் நடுவேயும் வீட்டு நினைவை எழுப்புகின்றன. என் புழுதி மேல் பற்றுடையவர்கள் இந்தக் குழந்தைகளே! சிற்றில் சமைத்து விளையாடுகிறார்கள். என்னை அவர்கள் தொட்டுப் பூசிக் கொள்ளும்போது இன்பத்தால் என் உடல் சிலிர்க்கிறது. கபடமற்ற சிறு உள்ளங்கள்! ஐயோ! என் நிலை எழுத்தே! இவ்வளவு அன்பைப் பெற்றும் என் ஆசையை அவர்களுக்குத் தெரிவிக்க முடியவில்லையே! நான் ஊமைப் பாதையல்லவா! சிற்றடிகள் என்மீது பதியும்போது என் கடினத்தை நினைந்து வெறுத்துக் கொள்வேன். 'குழந்தைகளின் தளிரடிகள் நோவுமோ என்னவோ? பூவின் இதழ்போல் மென்மையுடன் ஏனோ இல்லை என் உள்ளம்' என்றெல்லாம் ஏங்கும் என் மனம், காவியத்தில் வரும் தலைவி,

'வாராராயின், ஆறு உள்ளுதோறும்
நிலம் பரந்தொழுகும் என் நிறையில் நெஞ்சே'

என்று கூறுவதை ஒத்துப் படர்மெலிந்து இரங்குவேன்.

அன்றாடம் வழக்கமாக என்மீது செல்பவர்களை நான் அறிவேன். அவர்கள்

---

"'பிளாஸ்டிக்' பிடி போட்ட அற்புதமான குடை வைத்திருந்தேன்... போய்விட்டது, ஸார்!"

"எங்கேயாவது மறந்துவைத்துவிட்டீர்களோ?"

"இல்லை, ஸார்! நேற்றைய தினம் அந்தக் குடை அதன் சொந்தக்காரர் கண்ணில் பட்டு விட்டது, ஸார்!"

பொருட்டு நான் காத்திருப்பது அவர்களுக்குத் தெரியாது. என் மனத்துள்ளேயே கற்பனை செய்து அவர்கள் உருவைக் காண்பேன். வெகு நாட்களுக்கு முன், இதே போல் ஒருத்தி பஞ்சினும் மெல்லிய பாதங்களை என்மேல் இருத்தி ஒவ்வொரு நாளும் புன்கண் மாலையில் வருவாள். அவள் காலில் சிலம்பு 'கலீர் கலீர்' என்று ஒலிக்கும். அவள் இலவிதழைப் பேசுவதற்கெனப் படைக்கவில்லை பிரமன்; வேறு எதற்கோ!

அந்தி வானைப்போல் விரிந்த அவ்விழிக்கண் பேதை என்னையே துயருடன் நோக்கும். இதோ இந்த ஆலமரத்தின் இடதுபுறமாக என் கிளைப் பாதையொன்று ஊரை நோக்கிப் பிரிகிறதே, அந்த இடத்தில் தான் அவள் உடல் சோர்ந்து, உளம் வெதும்பி மோன வடிவாக நின்று கொண்டிருப்பாள். இன்னொருத்தன் யாரோ, வேலை முடிந்ததும் பாடிக்கொண்டே உல்லாசமாக அதே வேளை தன் வீட்டை நோக்கிச் செல்வான். அவன் ஒரு பக்கமும் பார்ப்பதில்லை; ஓரிடத்திலும் தயங்குவதில்லை. நேராக வீட்டு வாசலை அடைந்துதான் பிடித்த பந்துவராளி ஆலாபனத்தை முடிப்பான். அவன் போன பின்னர், வழிநோக்கிக் கண் அலமரும் அம்மடவால் வந்தவழியே ஓய்ந்த நடையுடன் திரும்புவாள். அப்புறம் உலகை இருள் கவிந்து கொள்ளும். அதன் குளிர்ச்சி என்மேல் படர்வதை உணர்வேன். பறவைகளின் குரல் அடங்கிவிடும். மனிதர் நடமாட்டமும் குறையும். மூங்கில் இலைகள் சல சலக்கும். இதைப்போல் எத்தனை நாட்கள்! தினமும் அந்தப் பேதை வந்து காத்து விட்டுப் போவாள். அவன் வந்தால் தானே! இளவேனிற் காலம். ஒரு நாள், பிற்பகல்; மாம்பூ உதிரும் பருவம். இன்னோர் ஆள் வருவானே, அவன் வரவில்லை. அன்று இரவு நேரம் கழித்தே அவள் வீடு சென்றாள். பனித்துளி உறைப்பதுபோல் என் புழுதி உள்ளத்தின்மீது அவள் உகுத்த இரு கண்ணீர்த் துளிகள் ஆவியாக மறையும். அதற்கு மறுநாள் பகலில் அதே ஆலமரத்தடியில் வந்து நின்றாள் அசடு. அன்றும் அவன் வரவில்லை. இரவு வந்ததும் அவளும் மெதுவாகத் திரும்பினாள். சற்று வழி நடந்ததும் அவளுக்குத் தள்ளாடியது. என்மேல் சுருண்டு விழுந்தாள். முகத்தைக் கைக்குள் புதைத்து நெஞ்சு விரிய அழுதாள். 'இந்த நிசியில் என்னை மதித்து அடைக்கலம் தேடி வருகிறாயே, யாரம்மா நீ? உன்னைப் புறக்கணித்தவன் என்னைவிடக் கல் நெஞ்சனா, மண்ணாங்கட்டியா? நீ பலதடவை அழைத்தும் பாராமல் சென்றானே, அவன் என்னைப் போல் ஊமையா? நீளிடை வழியில் எங்கு எதிர்நோக்கும் ஆள் கண் இல்லாதவனா, எனக்குத்தான் இல்லையென்றால்!' என்றேன்.

அந்தப் பெண் எழுந்தாள் ...... நின்றாள் கண்ணைத் துடைத்துக் கொண்டு நடக்கத் தொடங்கினாள். வீட்டுக்குப் போய் விட்டாளோ என்னவோ? ஒருகால் அவள் வீட்டு வேலையில் தன் ஆருத்துயரை மறந்தாளோ என்னவோ? அந்திவேளை, வீட்டு முற்றத்தில் நிலவொளியில் வீற்றிருக்கிறாள்—இது என் கற்பனை — யாரோ கூப்பிட்ட மாதிரி அவள் காதில் படுகிறது. திடுக்கிட்டு உள்ளே செல்கிறாள். அதற்கப்புறம் அவளுடைய மெல்லிய காலடி என்மேல் படவில்லை.

இதேபோல் எத்தனையோ காட்சிகள். அதை யெல்லாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடிகிறதா? அந்தப் பேதையின் சதங்கை ஓசை மட்டும் இன்னும் என் இதயத்துள் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. ஆனால் நான் யாருக்காக வருந்தப்பட வேண்டும்? எத்தனையோ பேர் வருகிறார்கள், போகிறார்கள்! நான் மட்டும் என்றைக்கும் இங்கேயே கிடக்கிறேன்.

வெய்யில் என்ன காய்கிறது, அப்பா! நான் பெருமூச்சு விடும் போதெல்லாம் நெருப்புப் பொறிபோல் புழுதித் திவலை நீல வானை மங்கச் செய்கிறது. ஏழை, பணக்காரன்; மூப்பு, இளமை; அழுகை, சிரிப்பு; இறப்பு, பிறப்பு; எல்லாம் என்மேல் தூசு போல் பறந்து சென்று மறைகின்றன. ஆகவே பாட்டைக்குச் சுகமோ, துக்கமோ, விருப்போ, வெறுப்போ, எதுவும் இல்லை. வீடு போனதைக் குறித்துப் புலம்புகிறது; நிகழ்வதைப் பார்த்து யோசிக்கிறது; வருவதை நம்பிக் காத்திருக்கிறது. ஆனால் முடிவற்ற வழியான நானோ ஒவ்வொரு கணமும் புதிய புதிய காலடிச் சுவடுகளை ஏந்திக் கொண்டு நிற்கிறேன். என் மென்மையை உணர்ந்து, அழியாச் சின்னத்தைச் செருக்குடன் என்மீது பதிக்கும் வீரன் ஒருவன் இருக்கிறானா? 'இதோ, நீ காற்றில் பெருமூச்சு விட்டுச் செல்கிறாயே, அது உனக்குப் பின்னால் நின்று உன்னை நினைத்துக் கொண்டிருக்குமா? புதிதாக வரும் பாட்டைசாரியின் அனுதாபத்தையும் கண்ணீரையும் பெற முடியுமா? காற்று எங்கேயாவது ஒரே இடத்தில் நிலைக்குமா? வீண் முயற்சி. எதையுமே நான் நீடித்துத் தாங்குவதில்லை. காலா காலமாக நான் மட்டும் பல புரட்சிகளுக்குச் சாக்ஷியாக இங்கேயே விழுந்து கிடக்கிறேன், வெறும் பாதை!

# இரவு வேளைகளின் உபாதைகள்?

## அவற்றை இம்முறையில் ஒழியுங்கள்...

இரவின் ஒவ்வொரு மணியிலும் தீராத தொல்லைகள்; வயிற்றுவலியிலும் தூக்கமேயில்லாமற் போகிறதா? ஏறக்குறைய எல்லா வயிற்றுக் கோளாறுகளுக்குக் காரணம் வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்புச்சத்து என்பதே வைத்தியர்களின் நிர்மானமான அபிப்பிராயம். ஆதலால், வயிற்றுப்பிசம், பொருமல், அஜீர்ணம் புளிப்பு, வாயு இத்யாதி உபாதைகளால் அவஸ்தைப் படுவதாயிருந்தால் அவற்றிலிருந்து விடுபட வழி இதோ இருக்கிறது.

உங்கள் மருந்துக் கடைக்காரரிடமிருந்து ஒரு பாட்டில் "பிஸ்மாக்" வாங்கி ஒரு டீஸ்பூன் (அல்லது 4/5 மாத்திரைகள்) சிறிது ஜலத்துடன் உட்கொள்ளுங்கள். வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்பு உடனே முறிக்கப்பட்டு பயனற்றதாகச் செய்யப்படுகிறது. வயிற்றின் உட்புறத்தோலின் எரிச்சலும் தணிக்கப்படுகிறது.

"பிஸ்மாக்" அதன் நிவாரண வேலையைத் தொடர்ந்து செய்யுமாறு ஒவ்வொரு வேளையும் ஆகாரத்திற்குப்பின்னர் ஒரு டீஸ்பூன் "பிஸ்மாக்" அருந்துங்கள்.

(மாத்திரைகளாகவும் பவுடராகவும்) கிடைக்கும்



**'பிஸ்மாக்'**
**க்ஷணமே அஜீர்ணத்தைப் போக்குகிறது**

**"பிஸ்மாக்" எவ்வாறு வலியிலிருந்து குணமளிக்கிறது.**

வயிற்றுக் கோளாறுகளுக்கெல்லாம் முக்கிய காரணமான, வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்பை முறித்துப்பயனற்றதாகச் செய்கிறது. "பிஸ்மாக்" புளிப்பை முறிக்கும் பொருள் அதிதுரிதமாக வலியைக் குறைத்தவுடன் மற்றப் பொருள்கள் வேலையைத் துவக்குகின்றன. ஒன்று புளிப்பு வயிற்றினுள் மேலும் சேருவதைத் தடுப்பது. மற்றொன்று வயிற்றின் உள்தோலின் எரிச்சலைக் குறைத்துக் குணப்படுத்துவது.

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய்-1
பிராஞ்சுகள் : கல்கத்தா — மதராஸ் — டில்லி

## அபாயகரமான
## இன்புளுயன்ஸாவையும்
## மார் வலியையும்
## வெளியேற்றுங்கள்



டாக்டர்கள் இந்த அற்புதமான பெப்ஸை
சிபார்சு செய்கிறார்கள்

# PEPS



இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப்புண், இன்புளுயன்ஸா, சளி ஜுரம், மார்வலி சுவாசகோச நோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது. இன்புளுயன்ஸா நீங்கள் கருதுவதைவிட அதிக ஆபத்தாக முடியக்கூடிய ரோகம். தாமதம் செய்யாதீர்கள். உடனே பெப்ஸ் மாத்திரைகளை உட்கொள்ளுங்கள். நீங்கள் மூச்சு விடும்போது பெப்ஸ் மருந்துச் சத்துக்கள் உங்களது சுவாசக் குழாய்கள் வழியாகச் சுவாசகோசத்திற்குச் சென்று ஆபத்தை அளிக்கும் கிருமிகளை நாசம் செய்து விடும். பெப்ஸ் எரிச்சலையும் புண்ணையும் குணப்படுத்துகிறது. மூச்சு விடுவதை எளிதாக்குகிறது, சுவாசாசயத்தை குணப்படுத்தி பெப்ஸ் அதை வலுப்படுத்துகிறது. பெப்ஸ் அற்புதமான மருந்து.

**பெப்ஸ் தொண்டைப் புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள்**

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி., மதராஸ் PPY 2

---




# ஓர் ஒப்புயர்வற்ற
## ஈரல் சஞ்சீவி

க்யூமரேஷ் ஈரல், வயிற்றுக் கோளாறுகளை நிவர்த்தி செய்வதில் ஓர் ஒப்பற்ற சஞ்சீவியாக இருப்பதுடன், ஈரல் குலைகளுக்கு அன்றாடம் வேலைகளை செவ்வனே செய்யும் பொருட்டு — ரத்தத்தை சுத்தம் செய்வது முதல், தேகத்திற்குத் தகுந்த போஷாக்கு அளித்து நோய் தொத்தாவண்ணமும் உதவி, அதிக ஊக்கத்தையும் ஊட்டுகிறது.

# க்யூமரேஷ்

ஈரலை நன்கு பாதுகாக்கிறது

ஓ. ஆர். வி. எம். லிட்.,

# கொசுவைக் கொல்லுங்கள்

## — அது மலேரியா, விட்டு விட்டு விசும் ஜுரம், டிங்கு ஜுரம் முதலிய நோய்க் கிருமிகளை ஏற்றிச் செல்கிறது



கொசு தேங்கி நிற்கும் ஜலத்தில்தான் முட்டை விட்டு விருத்தியாகிறது. முட்டை நிலையிலிருந்து பூரண வளர்ச்சிபெற 8 நாளாகும். 8 நாள் தொடர்ந்து ஜலம் தேங்கியிருக்கும் எந்த இடத்திலும் கொசுக்கள் தாராளமாக உற்பத்தியாகக்கூடும்.

கொசு உங்கள் உயிருக்கு நிரந்தர ஆபத்தை விளைவிக்கிறது, ஏனெனில் அது நோய்க் கிருமிகளை ஏற்றிச் செல்கிறது. அக் கிருமிகளுள் மலேரியா ஒன்றே நமது நாட்டின் ஒவ்வொரு வருஷமும் 10 லக்ஷம் உயிர்களை பலி வாங்குகிறது.

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலடங்கிய 5 கொடிய டோஸினின் கொசுக்களையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாகவும் நிச்சயமாகவும் கொல்லுகின்றன.

கொசு உங்களிடையே நோயைப் பரப்புமுன் அதைக் கொல்லுங்கள்.

FLIT

KILLS

**ப்ளிட்**

அதிக கொசுக்களைக் கொல்கிறது—
அதற்குச் சிலவழிக்கும் காசு
வீண்போகிறதில்லை

ஸ்டாண்டர்ட் வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

# "லக்ஸ் டாய்லட் சோப் உபயோகிப்பது தான் எனது அழகு பராமரிப்பு"

என்று சொல்கிறார் ஏ ஆர். சகுந்தலா



இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தை வசீகரமாகச்செய்யும்!




சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 294-X30 TM